Acme Series 2

श्री लघुभट्टारक प्रणीता

# लघुस्तुतिः

# ஸ்ரீலகுஸ்துதி மூலமும்

(லகுதீபிகா என்னும் தமிழுரையும்)

ஆக்கியோர்

வாதூல. வே. ராமசந்த்ரசர்மா அவர்கள்

Sole Selling Agent:

**B. S. & F. MART**

High Class Stationers,

113, Armenian St., G. T., Madras.

முதற்பதிப்பு: 1500.

Rs. 1—8—0



ஸ்ரீ அன்னையினுடைய

திருவடித்தாமரைகளில்

ஸமர்ப்பணம்

# Foreword

The **Laghustuti** is a short devotional poem of twenty verses with a concluding 21st verse in Sardulavikridita metre, addressed to the Goddess **Sarasvati**. In this short poem the author has brought in all the chief doctrines of the Sakta system in a very lucid way. The text with an elaborate commentary by Raghavananda has been already published in the Trivandrum Sanskrit Series as No. LX. by the late Ganapati Sastri in 1917. Now, Pandit Sri. Ramachandra Sarma who is on the staff of the Adyar Library, has written a Tamil explanation of the text and has published the text with this Tamil commentary. Sri Ramachandra Sarma has to his credit a few Sanskrit works published with his own Tamil explanations, besides the work he has done in the Adyar Library by collaborating in various publications of the Library. He is a good scholar in Sanskrit and he has also good command of Tamil. His explanation is accurate and clear.

His plan has much to commend. He takes the words of the Text in prose order and then gives the

meaning for each of the words. Later he gives the total meaning in Tamil, followed by detailed explanations. There are appropriate introductory statements before the verses are taken up for interpretation. Thus it is useful to Sanskrit students who stand in need of some help to understand the text, and also to those who know only Tamil.

The sublime thoughts contained in Sanskrit Literature can reach the people of India only through the regional languages, and it is a very laudable undertaking of the Pandit to have given this precious gem in a Tamil garb. I am sure this book will appeal to a large circle of readers and will meet with full success.

*Adyar Library,*
30th April,
1949.

C. KUNHAN RAJA

## முகவுரை

* ஸ்ரீதேவீபஞ்சஸ்தவங்களில் முதலாவதாகிய இந்த லகுஸ்தவம் ஸ்ரீபாரதீதேவியினுடைய அரும்பெரும் சக்திகளேயும், பெருமைகளேயும் விளக்குகின்ற ஒரு சிறு காவ்ய வடிவமான ஸ்தவமாகும். இதைச் செய்தவர் ஸ்ரீ லகுபட்டாரகர். இவர் சிறந்த தேவீயுபாஸகர். காஷ்மீர தேசத்தவர். பத்தாவது நூற்றுண்டிலே காஷ்மீர தேசத்திலே தோன்றிய பல சைவநூல்களிலும், சாக்தநூல்களிலும், இந்த ஸ்தவமானது பெரிதும் மேற்கோளாகக் கொள்ளப் படுவதைக் கொண்டு அதற்குச் சற்று முந்திய காலத்திலே தோன்றியிருத்தல் வேண்டுமெனத் தெரிய வருகிறது.

இக் கவியினுடைய இயற்பெயர் யாதென விளங்கவில்லே. மேற்கோளாகக் கொள்ளும் நூல்களிலே ஆசிரியருக்கு லகுபட்டாரகர் என்றும், இந்நூலுக்கு விம்சதிஸ்தவமென்றும் விளக்கம் கொடுக்கின்றனர். ஆகவே இது இவரது காரணப் பெயர் போலும். ஸ்ரீதேவீபஞ்சஸ்தவத்தைச் செய்தவர் ஸ்ரீகாளிதாஸரெனவும் ஒரு வழக்குள்ளது. எனவே ஸ்ரீகாளிதாஸருக்கே லகுபட்டாரகர் எனவும் பெயர் இருக்கலாம். இந்த விமர்சனமானது சரித்திர ஆராய்ச்சி செய்யும் அறிஞர்களுக்கே உரியதாகும்.

இந்த ஸ்தவமானது அழகிய நடையும், ஆழ்ந்த கருத்தும், பெருகிய பொருள்விளக்கமும் கொண்ட சீரிய காவியலக்ஷணங்களமைந்த சிறு (லகு) காவ்யமாகும். ஸ்ரீஸௌந்தர்யலஹரியைப் போலவே இந்நூலும் ஸ்ரீதிரிபுர

---

*ஸ்ரீதேவீபஞ்சஸ்தவங்களாவன: லகுஸ்தவம், சர்ச்சாஸ்தவம், கடஸ்தவம், அம்பாஸ்தவம், ஸகலஜநநீஸ்தவம் என்பன.

ஸௌந்தரியினுடைய பெருமையை விளக்குவதோடு, ஒவ்வொரு ச்லோகமும் ஒவ்வொரு பலத்தைக் குறித்த உபாஸனையையும் விளக்குவதாகும்.

மந்த்ரம், யந்த்ரம் முதலியவைகளின் விளக்கங்களும், முக்கியமாகத் தாந்த்ரிகர்களுக்கு (ஸ்ரீதேவீயுபாஸர்களுக்கு) இன்றியமையாததும், அநுதினமும் அநுஷ்டானத்திலே கைக்கொள்ள வேண்டியதும், ஸ்ரீகுருப்ரம்பரையிலே வந்த உபதேசத்தோடு கூடியதுமான நாமபாராயணத்தினுடைய விளக்கமானது இந்நூலிலே சீரிய முறையிலே உபதேசிக்கப்படுவது ஒன்றே இந்த ஸ்தவத்தின் தனிப் பெருமையை விளங்கச் செய்வதற்குப் போதிய சான்றாகும். இந்த நூலைத்தவிர வேறெந்த நூலிலும் இந்த நாம பாராயணம் விளக்கப்படவில்லை யெனவும் தெரியவருகிறது.

எனவே இந்நூலுக்குள்ள அருமை பெருமைகளை அவரவர்களுடைய சித்தத்தின் பரிபக்குவத்திற்குகந்தவாறு அநுபவிக்கவியலுமே யல்லாது ஒருவர் மற்றொருவருக்கு எடுத்துச் சொல்லுவதும் எளிதான காரியமல்ல. ஆயினும் இச்சிறந்த ஸ்தவத்தை நாள்தோறும் பாராயணம் செய்து வருவது நமது நாட்டிலே தோன்றிய ஆஸ்திகக் குடும்பத்தினரது சீரிய மரபாகும்.

பாராயணமென்பது தெய்வவழிபாடுகளிலே ஒன்றாகும். இதை நாமபஜனம் எனவும் சொல்லலாம். அதாவது அகத்திலே உபாஸனைக்குக் குறிக்கோளாக் கொண்ட மூர்த்தியினுடைய அரும்பெரும் குணங்களை வாயாரப் புகழ்ந்து, ஒரு முகப்படுத்திய மனத்திலே அச்சீரிய குணங்களை இடைவிடாது லயிக்கச் செய்து, தானும் உபாஸனா மூர்த்தியும் ஒன்றேயென அபேதமாகப் பாவனை செய்து வருவதே தான் நாமபாராயணத்தின் பொருளாகும்.

அதுவன்றி கண்கள் ஒன்றைப் பார்க்க, மனம் ஒன்றை நினைக்க, கைகள் ஒன்றைச்செய்ய வாயால் எவ்வளவு

தடவை நாமாக்களையுச்சரித்தாலும், ச்லோகங்களைச் சொன்னாலும் ஒருவிதபயனும் ஒருக்காலும் உண்டாகாது. ஒவ்வொரு நாமாவையும் நன்கு ஆராய்ந்தறிந்து பொருள் கொண்டு, அதனாலேற்பட்ட மனப்பண்புடன் உபாஸனை செய்து வருவதே சாலச்சிறந்ததாகும். இதுவே நமது ஆன்றோர் நமக்கு வகுத்தருளிய வழியுமாகும்.

சென்ற சிலதினங்களாக இக்கருத்தைச் சிந்தையிலே கொண்டு ஆஸ்திக அன்பர்களுக்கும், அன்னைமார்களுக்கும், ஸஹோதரஸஹோதரிகளுக்கும், பயன் தரும் வழியிலே, பதவுரை, பொழிப்புரை, விரிவுரை முதலிய விளக்கங்களோடு எனது சிற்றறிவிற்கு எட்டியவரையில் வடமொழியிலுள்ள பல உரைகளையும் நோக்கிச் சுருக்கமாக எழுதலானேன்.

இச்சிறந்த ஸ்தவத்திற்கு ஸ்ரீபரமேச்வரர் என்றவர் ஆயிரம் ச்லோகம் கொண்டதோர் உரையொன்றும் செய்திருக்கிறார். அவரது உரைமுழுவதும் ச்லோகவடிவாயமைந்தது. மற்றும் ஸ்ரீஸிம்ஹராஜர், ஸ்ரீஸோமதிலகஸூரி, ஸ்ரீராகவானந்தர், ஸ்ரீமஹாகவிமகுடமணி, ஸ்ரீஸதாசிவர், ஸ்ரீகச்சபேச்வரஸூரி (எனதுகுரு)முதலிய பல அறிஞர்கள் விரிவாக உரை செய்திருக்கின்றனர். இவர்கள் அனைவரும் ஸம்ப்ரதாய வழியிலே வந்த சிறந்த தேவீயுபாஸகர்களாவர். அத்துடன் சாஸ்த்ரபரிசீலனையிலும் கரை கண்டவர்கள். இவர்களுடைய உரைகளிலே ஆங்காங்கு பல ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்கள் விளக்கப்படுகின்றன. அவைகள் அனைத்தும் இங்கே தமிழிலே மொழிபெயர்க்க வொண்ணாததாகும். வடமொழியிலே நன்கு பரிசயமுள்ளவர்கள் அவைகளைப் படித்து ரஸிக்க முடியும். இங்கு எவ்வளவு தூரம் அவச்யமான பொருள் விளக்கம் கொடுக்கவேண்டுமோ, அவ்வளவு தூரம் அவச்யமானவைகளுக்குப் பொருள் விளக்கம் கொடுக்க முயற்சித்துள்ளேன்.

இக்காவியத்தைக் கண்ணுறும் ஆஸ்திக அன்பர்களும், அன்னைமார்களும், ஸஹோதரஸஹோதரிகளும் இதனை

நன்கு படித்து ஸ்ரீ த்ரிபுரஸுந்தரியினுடைய திருவருளைப் பெற வேண்டுமென்பதே எனது பேரவாவாகும். எனவே இதிலுள்ள குற்றங்களைக் களைந்து குணங்களைக் கொண்டு நடு நோக்குடன் என்னைப் பயன் பெறச் செய்வதும் குணக் குன்றிலே யிலங்கும் கற்றறிந்த மாந்தர் கடனாகும்.

இந்நூல் வெளிவருவதற்கு முக்ய காரணமாயிருப்பவரும், என்னை அடிக்கடி முயற்சி தளராது இது போன்ற பணிகளிலே ஈடுபடச் செய்துவருபவரும், ஸ்ரீ அன்னையின் திருவருளிலே ஒன்றியிருப்பவருமான எனது ஆத்ம நண்பர் ஸ்ரீ ஸீதாராம அய்யர் அவர்களுக்கும், இந்நூலுக்கு நூன் முகம் கொடுத்துதவிய பேராசிரியர் ஸ்ரீ குன்ஹன் ராஜா அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுவதோடு, இதனை நல்ல முறையிலே பெருமுயற்சியுடன் அச்சிட்டுக் கொடுத்துதவிய எனது நண்பர் ஸ்ரீ ராமய்யர் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி உரித்தாகும்.

**नमोवाङ्मनसातीतमहिम्ने परमेष्ठिने ।**

**त्रिगुणाद्यगुणानन्तगुणनिर्गुणमूर्तये ॥**

ஸித்தாச்ரமம்
விரோதி
சித்திரை 10

**வே. ராமசந்த்ர சர்மா**

शिवाभ्यां नमः

ஸ்ரீலகுபட்டாரகர் இயற்றிய

# லகுஸ்துதி (மூலமும்)

லகுதீபிகா என்னும் தமிழுரையும்.

## தோற்றுவாய்

லகுஸ்துதி யென்னும் இச்சிறந்த ஸ்தோத்திரத்தைச் செய்த ஸ்ரீலகுபட்டாரகர் ஸ்ரீதேவியினுடைய கருணாகடாக்ஷத்தால் ஜீவன்முக்திபதவியையடைந்த ஒரு சிறந்த மஹாநுபாவராவர். இவர், அஞ்ஞானத்தால் ஸம்ஸாரக் கடலில் மூழ்கிக் கரைசேர வழியறியாது பரிதவிக்கின்ற மூடஜனங்களைக் கண்டு மனங்கலங்கி அவர்களும் தன்னைப் போலவே ஸ்ரீதேவியினுடைய கருணையையடைய வேண்டுமென நினைத்து, ஸ்ரீதேவியினுடைய தத்துவ-விபூதி-விபவ-விசேஷங்களை பிரகாசிக்கச்செய்கின்ற இந்த ஸ்துதியை 'சார்தூல விக்ரீடிதம்' என்ற விருத்தத்திலே இருபத்தொன்று ச்லோகங்கள் கொண்டதாகச் செய்துள்ளார்.

இந்த ஸ்துதியிலே முதல் ச்லோகத்தில், ஸ்ரீத்ரிபுராமந்த்ரத்தையும், த்ரிபுராதேவியின் ஸ்வரூபத்தையும், த்ரிபுராதேவியினுடைய உபாஸனமார்க்கத்தையும்; இரண்டாவது ச்லோகத்தில், மோக்ஷத்தின் பொருட்டு முதல்பீஜத்திலுள்ள சப்தப்ரபஞ்சபீஜமாகிய நாதத்தோடு கூடிய பிந்துவினுடைய உபாஸனையையும்; குண்டலினீஸ்வரூபத்தையும் விரிவாகச் சொல்லுகிறார். மூன்று, நான்கு, ஐந்தாவது ச்லோகங்களிலே, முறையே முதல், இரண்டு, மூன்றாவது பீஜங்களுடைய உபாஸனைகளாலுண்டாகும் பலன்

களையும் ; ஆருவது ச்லோகத்திலே, மந்த்ரஜபக்ரமத்தையும் விளக்குகிருர். இந்த ஆறு ச்லோகங்களும் பீஜாக்ஷரங்களை மாத்திரம் குறித்துச் சொல்லுவனவாம்.

ஏழு முதல் பதினோராவது ச்லோகம் வரையில் முன்பு கூறிய பீஜாக்ஷரங்களுடைய த்யானமூர்த்திகளைச் சொல்லுவனவாம். அதாவது, ஏழாவது ச்லோகம், கவிதாசக்தியைக் குறித்து, ஸஹஸ்ராரகமலத்தில் சக்திபீஜத்தையும்; மூலாதார கமலத்திலே காமராஜ பீஜத்தையும்; ஹ்ருதயகமலத்திலே வாக்பவ பீஜத்தையும், "**वामे**" என்ற ச்லோகத்தில் சொல்லிய ஸகலமூர்த்தியுடன் அபேதமாக த்யானம் செய்யவேண்டுமென்றும்; எட்டாவது ச்லோகம், வாக்கின் வன்மைக்காக ஸஹஸ்ராரகமலத்திலே சக்திபீஜத்தை, "**ये त्वाम्**" என்ற ச்லோகத்தில் சொல்லிய த்யானமூர்த்தியோடு அபேதமாகவும்; ஒன்பதாவது ச்லோகம், வச்யத்தின் பொருட்டு மூலாதாரகமலத்திலே காமராஜபீஜத்தை "**ये सिन्दूर**" என்ற ச்லோகத்திலே சொல்லிய மூர்த்தியோடு அபேதமாகவும்; பத்தாவது ச்லோகம், ஐச்வர்யத்தின் பொருட்டு ஹ்ருதய கமலத்திலே "**चञ्चत्काञ्चन**" என்ற ச்லோகத்தில் சொல்லிய மூர்த்தியோடு அபேதமாகவும்; பதினோராவது ச்லோகம், மோக்ஷத்தின் பொருட்டு ஸஹஸ்ராரகமலத்திலே காமராஜ பீஜத்திலுள்ள இரண்டாவதாகிய ககாரலகாரங்களைத் தள்ளி எஞ்சிய காமகலாக்ஷரத்தை, "**आभ्रत्या**" என்ற ச்லோகத்திலே சொல்லிய மூர்த்தியோடு அபேதமாக த்யானம் செய்யவேண்டுமென்பதையும் கூறுகின்றன. பன்னிரண்டாவது ச்லோகம், ஸ்ரீதேவியினுடைய உபாஸனையானது இஹலோக பரலோகஸுகங்களை ஒன்ருகவே ஒரே ஸமயத்தில் கொடுக்க வல்லது என்பதை உபதேசிப்பதாகும்.

பதிமூன்ருவது ச்லோகம், ஸ்ரீதேவியை உபாஸனை செய்தாலன்றி சக்ரவர்த்தி பதவியை ஒருபொழுதும் அடைய முடியாது என்பதையும்; பதினான்காவது ச்லோகம், ஸ்ரீ தேவியினுடைய உபாஸனையால் ஸகலகார்யஸித்திகளையும் பெறலாமென்றும், அக்காரியங்களைச் செய்யும் அதிகாரிகளையும், ஸ்தானங்களையும் விவரிப்பதாகும். பதினைந்தாவது ச்லோகம், சப்தாதீதமாயிருக்கின்ற ஸ்ரீதேவியினுடைய பரரூபத்தையும்; பதினாருவது ச்லோகம், அபரரூபத்தையும்; பதினேழாவது ச்லோகம், நாநாவிதமான கார்யஸித்திகளுக்கு வேண்டிய ஸ்ரீதேவியினுடைய நாமரூபங்களையும்; பதினெட்டாவது ச்லோகம், மந்த்ரபாராயணக்ரமத்தையும்; பத்தொன்பதாவது ச்லோகம், நாமபாராயணக்ரமத்தையும்; இருபது, இருபத்தொன்ருவது ச்லோகங்களிரண்டும், பலச்ருதியின் விளக்கத்தோடு மந்த்ரோத்தாரத்தின் சிறப்புக்களையும் சொல்லுவனவாகும்.

(அவதாரிகை)

ஸ்ரீலகுபட்டாரகர் இவ்விதம் தானியற்றிய இச்சிறப்பு வாய்ந்த ஸ்துதியானது ஒருவித இடையூறுகளுமின்றி இனிது நிறைவேறுவதற்காக ஆசீர்வாத ரூபமான மங்களாசாஸனத்தை இந்த முதல் ச்லோகத்திலே செய்கிருர்.

**ऐन्द्रस्येव शरासनस्य दधती मध्येललाटं प्रभां**
**शौक्लीं कान्तिमनुष्णगोरिव शिरस्यातन्वती सर्वतः ।**
**एषासौ त्रिपुरा हृदि द्युतिरिवोष्णांशोः सदाहःस्थिता**
**छिन्द्याद्वः सहसा पदैस्त्रिभिरघं ज्योतिर्मयी वाङ्मयी ॥ १ ॥**

(பதவுரை)

**मध्येललाटम्** - நெற்றியினுடைய நடுவில்; **ऐन्द्रस्य** - இந்த்ர ஸம்பந்தமான; **शरासनस्य** - தநுஸினுடைய;

**इव** - போல; **प्रभाम्** - காந்தியை; **दधती** - தரிக்கின்றவளும்; **शिरसि** - சிரஸில்; **अनुष्णगोः** - சந்த்ரனுடைய; **इव** - போல; **शौक्लीम्** - வெண்மையான; **कान्तिम्** - காந்தியை; **सर्वतः** - எங்கும்; **आतन्वती** - பரப்புகின்றவளும்; **हृदि** - ஹ்ருதயத்தில்; **अहःस्थिता** - உதயத்தையடைந்த; **उष्णांशोः** - ஸூர்யனுடைய; **द्युतिः** - சோபை; **इव** - போல; **स्थिता** - இருக்கின்றவளும்; **ज्योतिर्मयी** - (கேவலம்) ஒளியின் வடிவாகவும்; **वाङ्मयी** - (கேவலம்) வார்த்தைகளின் வடிவாகவும்; **त्रिभिः**-மூன்று; **पदैः** - பதங்களோடு கூடியவளுமான; **एषा** - இந்த; **असौ** - அந்த த்ரிபுரஸுந்தரீ; **वः** - உங்களுடைய; **अघम्** - பாபத்தை; **सदा** - எப்பொழுதும்; **छिन्द्यात्** - நாசம் செய்யட்டும்.

(பொழிப்புரை)

இந்த்ர தநுஸைப் (வானவில்) போன்ற பல வர்ணங்களோடு கூடிய காந்தியை நெற்றியினுடைய நடுவிலும்; சந்த்ரனுடைய வெண்மையான காந்தியை சிரஸிலும்; பகலில் பிரகாசிக்கின்ற ஸூர்யனுடைய காந்தியை ஹ்ருதயத்திலும் தரித்துக் கொண்டு ஒளியின் வடிவாகவும்; ஒலியின் (சப்தங்கள்) வடிவாகவும்; மூன்று பதங்களினால் அல்லது மூன்று ஸ்தானங்களினால் குறிக்கப் படுகின்றவளுமான இந்த த்ரிபுரஸுந்தரீ உங்களுடைய பாபத்தை விரைவில் நாசம் செய்யட்டும்.

(விரிவுரை)

நெற்றியினுடைய நடுவிலே (இரண்டு புருவங்களுக்குமிடையில் ஆஞ்ஞாசக்ரத்தில் இந்த்ர தநுஸைப் (மழைகாலத்திலே ஆகாயத்தில் பல வர்ணங்களோடு

தோன்றும் வானவில்) போன்ற காந்தியை 'க்லீ' என்ற உருவத்தோடும்; சிரஸில் (த்வாதசாந்தபத்மம்) சந்த்ரனைப் போன்ற வெண்மையான காந்தியை நான்கு பக்கங்களிலும் பரவச்செய்து "ஸௌ:" என்ற உருவத்தோடும்; ஹ்ருதயத்தில் (அநாஹதபத்மம்) உதய காலத்திலே தோன்றும் ஸூர்ய னுடைய சிவந்தகாந்தியை 'ஹ்ரீ' என்ற உருவத்தோடும்; ஒளியின் வடிவாகவும், ஒலியின் வடிவாகவும், மூன்று ஸ்தானங்களின் வடிவாகவும், அல்லது மூன்று பீஜாக்ஷரங் களின் வடிவாகவும் இருந்து கொண்டு ஸ்ரீத்ரிபுரஸுந்தரீ உங்களுடைய ஆணவம், மாயீ, கார்மம்,[1] என்ற மூன்று விதங்களான மலங்களும் எப்பொழுதும் மூன்று காலத்தி லும்[2] உண்டாகாது வெகு விரைவில் நாசம் செய்யட்டும்.

இங்கே உபாஸகர்களினால் ஆஞ்ஞாசக்ரத்தில் வெண்மை, சிவப்பு, கருப்பு, என்ற மூன்று வர்ணங்க ளோடுகூடிய ஒளியின் வடிவாகவும், ஸஹஸ்ரார கமலத்தில் வெளுப்பு -வர்ணத்தோடு கூடிய ஒளியின் வடிவாகவும்; அநாஹத கமலத்தில் சிவப்பு வர்ணத்தோடு கூடிய ஒளியின் வடிவாகவும்; த்யானத்ருஷ்டியோடு பார்க் கப்படுகின்றவளும், ஒலியின் வடிவாக மூன்று பீஜாக்ஷரங் களிலும் பரவியிருக்கின்றவளுமான இந்த ஸ்ரீமஹாத்ரிபுர ஸுந்தரீ உங்களுடைய பாபத்தைத் தாமதியாது நாசம் செய்யட்டும் என்பது ச்லோகத்தின் ஸாரமாகும்.

---

1 ஆணவமலமாவது-அபூர்ணமாயிருத்தல். கார்மமலமாவது-சுபமும் அசுபமுமான அநுஷ்டானம். மாயீமலமாவது-பின்னமான வேத்யங்களின் விளக்கம், அல்லது மாயை முதல் வித்யாதத்துவம் வரையிலுள்ள சட்டைகள்.

2 மூன்றுகாலங்கள்—இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம்.

இக்கருத்தையே ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமமும், "சந்த்ரனைப் போன்ற வெண்மை நிறத்தோடு சிரஸிலிருப்பவளும்; வானவில் போன்ற பல வர்ணங்கள் தோய்ந்த நிறத்துடன் நெற்றியிலிருப்பவளும்; ஸூர்யனைப் போன்ற சிவந்த நிறத்தோடு ஹ்ருதயத்திலிருப்பவளும்"[1] என வர்ணத்திருக்கிறது.

இங்கு சிரஸ், நெற்றி, ஹ்ருதயம், என்றது முறையே ஸஹஸ்ராரத்தையும், ஆஞ்ஞையையும், அநாஹதத்தையும் குறிப்பதாகும். இவ்விதமே ஸௌபாக்யஹ்ருதயத்திலும்; "ஹே மஹேச்வரி; நீ உன்னுடைய மூலாதாரத்தில் ஸுவர்ணத்தைப் போன்ற காந்தியையும்; அநாஹதத்தில் பலவர்ணங்களுடன் மின்னல் போன்ற காந்தியையும்; ஆஞ்ஞாசக்ரத்தில் சந்திரகிரணம் போன்ற வெண்மையான காந்தியையும் தரித்துக் கொண்டிருக்கிறாய்"[2] என வர்ணித்திருப்பது போல உண்மையில் பாலாமந்த்ரத்திலுள்ள ஒளியானது மூலாதாரம் முதல் ப்ரஹ்மரந்த்ரம் வரையில் பரவி ப்ரகாசிக்கின்ற குண்டலிநீசக்தியைத்தான் குறிப்பதாகும்.

அது எவ்விதமெனில், "பிரளயகாலத்தில் தோன்றும் அக்நியைப் போன்ற காந்தியானது முதலில் மூலாதாரத்திலிருந்து அநாஹதத்தைத் (ஹ்ருதயத்தை) தொடுகிறது. இதுவே முதலாவது கூடமாகும். கோடிஸூர்ய ப்ரகாசம் போன்ற மற்றொரு காந்தியானது அநாஹதத்திலிருந்து ஆஞ்ஞை (புருவத்தின் நடுவு) வரையில் சென்று தொடுகிறது.

1 **शिरस्थिता चन्द्रनिभा भालस्थेन्द्रधनुःप्रभा ।
हृदयस्था रविप्रख्या............ल०स० (१७०)**

2 **यौनौ कनकपुञ्जाभं हृदि विद्युच्छटोपमम् ।
आज्ञायां चन्द्रसंकाशं महस्तव महेश्वरि ॥**

இதுவே இரண்டாவது கூடமாகும். சந்திரனைப் போன்ற ஒளிமிகுந்த மற்றொரு காந்தியானது ஆஞ்ஞை முதல் நெற்றி வரையில் வியாபித்திருக்கின்றது. இதுவே மூன்றாவது கூடமாகும்."[1] இதுவே ஸ்ரீவித்யையினுடைய மந்த்ர ரூபமான த்யானமாகும். ஆகவே பாலாமந்த்ரரூபமான தேஜஸுக்கும், குண்டலினீ சக்திக்கும் வித்யாஸமில்லை யென்பதும் ரஹஸ்யார்த்தமாகும்.

மற்றும், பாலாபீஜத்தில் முதல் அக்ஷரமாகிய வாக்பவ பீஜமும்; ஸ்ரீவித்யையினுடைய முதல் ஐந்து அக்ஷரங்கள் கொண்ட வாக்பவகூடமும்; பாலஸூர்யனைப் போன்ற காந்தியோடு மூலாதாரம் முதல் அநாஹதம் வரையிலும்; பாலாதேவியினுடைய இரண்டாவது அக்ஷரமாகிய காமராஜ பீஜமும், ஸ்ரீவித்யையினுடைய அடுத்த ஆறு அக்ஷரங்கள் அடங்கிய காமராஜகூடமும்; பலவர்ணங்களோடு அநாஹதம் முதல் ஆஞ்ஞை வரையிலும்; பாலாதேவியினுடைய மூன்றாவது அக்ஷரமாகிய சக்திபீஜமும், ஸ்ரீவித்யையினுடைய எஞ்சிய நான்கு அக்ஷரங்கள் கொண்ட சக்திகூடமும்; பூர்ணசந்த்ரப்ரகாசத்தோடு ஆஞ்ஞை முதல் ஸஹஸ்ராரம் வரையிலும் பரவியிருக்கின்றன என்பது உண்மையான கருத்தாகும். இவ்விதம் பீஜம், கூடம், நாதம் என்ற மூன்றுக்கும், பேலேயுள்ள தேஜஸுக்கும், வேற்றுமையில்லையென்பதும் கிடைக்கின்றது.

---

1 "प्रलयाग्निनिभं प्रथमं मूलधारादनाहतं स्पृशति ।
तस्मादाज्ञाचक्रं द्वितीयकूटं तु कोटिसूर्याभम् ॥
तस्माल्ललाटमध्यं तार्तीयं कोटिचन्द्राभम् ॥" (व० र० २०, २१)

**ज्योतिर्मयी** - (ஒளியின்வடிவு) என்றதால் இந்த்ர தநுஸையும், சந்த்ரஸூர்யர்களையும் போன்ற காந்தியோடு கூடிய ஜ்யோதிஸ்வரூபமாயுள்ளவள் என்றும்; **वाङ्मयी**- (ஒலியின் வடிவு) என்றதால் ऐं (ஐம்) முதலான பீஜாக்ஷரங்களுடைய ஸ்வரூபமாயுள்ளவள் என்றும் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் ஜ்யோதிர்மயீ சப்தமானது உண்மையில் அநாவ்ருத (மறைக்கப்படாத) ஆத்மஸ்வரூபத்தின் ஒளியாகவும், ஸ்வயம்ப்ரகாசமாகவும், ஸர்வப்ரபஞ்ச வடிவாகவும்,பரப்ரஹ்ம வடிவாகவுமிருக்கின்ற ஸ்ரீபரமேச்வரனுடைய ஸ்வபாவ (இயற்கை) வடிவமான (அஹங்கார ரூபிணீயான) இவ்விதம், அவ்விதம், என்று நிர்ணயம் செய்ய முடியாத நிலையிலேயிருக்கின்ற அஹம் (நான்) என்ற விமர்சசக்தியைத்தான் குறிப்பதாகும்.

வரிவஸ்யாரஹஸ்யத்திலும் இந்த விமர்ச சக்தியைப் பின் வருமாறு வர்ணித்திருக்கிறது. "அந்த மஹாப்ரகாசத்திற்கு - சிவமென்னும் பரப்ரஹ்மத்திற்கு - இயற்கையாகவே சலிக்கின்றதாயும், (**स्फुरण** - அசைவது, நகர்வது) ப்ரகாசவடிவாகவுமுள்ள ஒருவித சக்தியுண்டு. அந்த சக்தியோடு சேர்ந்த காரணத்தாலே அந்த மஹாப்ரகாசம்-ஒளிப்பிழம்பு-உலகத்தில் ஸ்ருஷ்டி;(ஆக்கல்) ஸ்திதி;(காத்தல்) ஸம்ஹாரம்; (அழித்தல்) திரோதானம்; (மறைத்தல்) அநுக்ரஹம் (அளித்தல்) என்ற ஐந்து தொழில்களையும் நடத்தி வருகின்றது." [1]

---

1 नैसर्गिकी स्फुरत्ता विमर्शरूपास्य वर्तते शक्तिः ।
तद्योगादेव शिवो जगदुत्पादयति पाति संहरति ॥ (व० र० ४)

(**नैसर्गिकी** 'ஸ்வபாவம்') என்றதால் சந்த்ரனும் சந்த்ரிகையும்; மலரும் மணமும்,; சர்க்கரையும் மதுரமும் போல அந்தப்ரகாச சக்திகள் இரண்டும் ஒன்றோடொன்று வேறுபடாதவை என்பதும் கருத்தாகும்.

**वाङ्मयी**—(ஒலியின் வடிவு) என்ற சப்தமானது அந்த விமர்ச சக்தியினுடைய வாசகமாக வியாபித்து (பரவி) (பூரணமான அஹம் என்ற) அகாரம் முதல் ஹகாரம் வரையிலுள்ள ஸமஸ்தவேதபீஜங்களுக்கும் காரணமாயிருந்து கொண்டு (**अहम**) நான் என்ற வாசகத்தைக் குறிப்பதாகும். (**एषा** - இந்த) என்றதால் த்வைத ப்ரபஞ்சத்தோடுகூட யாவராலும் உபாஸிக்கப் படுகின்றவளென்றும்; (**असौ**-அந்த) என்றதால் ஞானிகளால் மாத்திரம் உபாஸிக்கத் தக்க அகண்டாகார ஸம்வித்ரூபிணீ (எங்கும் நிறைந்த சைதன்ய) எனவும் தாத்பர்யமாகும். (**अघम्**-பாபம்) என்ற சப்தமானது ஆத்மதத்துவத்தினுடைய அஞ்ஞான நிமித்தமாகத் தங்களால் ஆரோபிக்கப்பட்ட புண்யபாபங்களைக் குறிப்பதாகும். (**त्रिपुरा**-மூன்று புரம்) என்றதால் தேஜஸ், (நெருப்பு) அப்பு, (ஜலம்), அன்னம், (ஸாதை) என்றும், மூன்று உலகங்கள், மூன்று மூர்த்திகள், மூன்று சக்திகள், முதலியவைகளான த்ரிபுடிகளுக்கும் முன்னேயுள்ளவள் எனவும் தாத்பர்யமாகும்.

மற்றும் இந்த ச்லோகத்திலே அடங்கியுள்ள மந்த்ரோத்தாரமும் சொல்லப்படுகிறது. அது வருமாறு— முதல் இரண்டு பாதங்களில் பாலாமந்த்ரத்தினுடைய முதல் இரண்டு அக்ஷரங்களையும்; மூன்றாவது பாதத்தில் விஸர்கத்தோடு சேர்ந்த மூன்றாவது அக்ஷரத்தையும்; (**सर्वत**:-

எங்கும்) என்றதால் மூன்ருவது அக்ஷரத்தினுடைய கடைசியிலுள்ள விஸர்க்கத்தையும் சேர்த்து ऐं-क्लीं-सौः எனக்கொள்ள வேண்டும். (मन्त्रोद्धारविधिर्विशेषसहितः- மந்த்ரோத்தார விதியானது விசேஷத்தோடு கூடியது ) என்று இருபதாவது ச்லோகத்தில் சொல்லி யிருப்பது கொண்டு இந்தச்லோகத்தில் மந்த்ரவிசேஷங்களையும் உத்தாரம் செய்திருக்கிறது.

அது எவ்விதமெனில்—ऐं-ई-औ ; ऐं-ई-औ ; ऐं-ई-औ ;ऐं ई औ என்னு மிவைகள் சுத்தபேதங்களாகும். सर्वतः हस्थिता— மூன்று பீஜாக்ஷரங்களிலும் ஹகாரத்தோடு இருப்பவள் என்று கிடைப்பதால், हैं ; हक्लीं ; हसौं ; என்ற த்ரிபுரவாஸிநீ மந்த்ரத்தையும்; सहसा—ஹகார ஸகாரங்களோடு கூடியிருப்பவள் என்று கிடைப்பதால், हसैं ; हसक्लीं ; हसौः என்ற த்ரிபுராஸ்ரீ மந்த்ரத்தையும்; सहसा सदाहः स्थिता என்றதால், (सदाहः அக்நிபீஜமாகிய ரகாரம்,) हस्रैं-हस्क्लरीं-हस्रौः என்ற த்ரிபுராம்பா மந்த்ரத்தையும் ; सर्वतः सहसा सदाहः स्थिता क्लीं कान्तिम् आतन्वती-என்றதால் हसक्लरैं-हसक्लरीं-हसक्सरौः என்று ஐந்து கூடாக்ஷரங்களாலாகிய ஸ்ரீத்ரிபுராஸித்தா மந்த்ரத்தையும் ; अनुष्णगोः शिरसि - என்றதால் சந்த்ர பீஜமாகிய ठ காரத்தினுடைய சிரோபாகத்தின் - மேலேயுள்ள-ड காரமென்று கிடைப்பதால் हस-कलरडैं-हसकलरडीं-हसकलरडौः என்று த்வாதசார்த (ஆறு) கூடாக்ஷரங்களாலாகிய த்ரிபுராம்பிகா மந்த்ரத்தையும் உத்தாரம் செய்திருக்கிறது.

பாலாபீஜாக்ஷரங்களில் இது போலவே அனேக மந்த்ரங்கள் அடங்கியிருக்கின்றன. மற்றும் அகாரத்

தோடு கூட இகாரம் சேரும்பொழுது (**तव+इति—तवेति**) என்று (**ए**) ஏகாரமாகவும்; அகாரத்தோடு ஏகாரம் சேரும்பொழுது (**तव+एतत्—तवैतत्**) என (**ऐ**) ஐகாரமாகவும் திரியும். இவைகள் ஹ்ரஸ்வத்திலும் (குறில்) தீர்க்கத்திலும் (நெடில்) உண்டாகுமென்று வடமொழி வியாகரணத்தை யநுஸரித்துச் சொல்லப்படுவதாகும். **अ-आ-इ-ई-ए-ऐ** என்ற ஆறு ஸ்வரங்கள் (உயிரெழுத்துக்கள்) முதல் பீஜத்திலும்; அகாரத்தோடு உகாரம் சேரும்பொழுது (**गङ्गा+उदकम्—गङ्गोदकम्**) என (**ओ**) ஓகாரமாகவும்; அகாரத்தத்தோடு ஓகாரம் சேரும்பொழுது (**तव+ओषधिः—तवौषधिः**) என (**औ**) ஔகாரமாவும் திரியும். இந்த நியாயத்தை யநுஸரித்து, **उ-ऊ-ओ-औ**—என்ற நான்கு ஸ்வரங்களும், விஸர்க்கமும், நடைசிபீஜத்திலும் சேர்ந்திருக்கின்றன. (**क्लीं**) க்லீங்காரத்தில் ககார இகாரங்களைக் கொண்டு ககாரம் முதல் இகாரம் வரையிலுள்ள அக்ஷரங்களை ஸங்க்ரஹம் (சுருக்கம்) செய்தால் அவைகளும் ரகாரலகாரங்களுடைய ரூபாந்தரமான (வேறு வடிவு) **ऋ-ऌ** என்ற ஸ்வரங்களும் மத்ய பீஜத்தினுள்ளே அடங்கியிருப்பது புலனாகும்.

இதுவேயன்றி; **अहः स्थिता** என்ற பதத்திலிருந்து (**अ**) அகாரம் முதல் (**ह**) ஹகாரம் வரையிலுள்ள அக்ஷரங்களும் குறிக்கப்படுகின்றதெனச் சொல்லமுடியும். இவ்விதம் இங்கே மாத்ருகாக்ஷரங்களையெல்லாம் உத்தாரம் (தோற்றம்) செய்திருப்பது கொண்டு இந்த மந்த்ரம் ஸர்வ மந்த்ரதந்த்ரவேதசாஸ்த்ர இதிஹாஸ புராணங்களுடைய ஸாரமாகவுள்ளது என்பதும் ஸித்தமாகிறது.

இனி மூன்றுவது பீஜாக்ஷரத்திலே, सु-औ-जस् என்ற முதல் விபக்தியின் (விகுதி) உருவத்தை விளக்குவதைக் கொண்டு மற்ற ஆறு விபக்திகளும், (स) ஸகார (औ) ஔ காரங்களைக் கொண்டு, முப்பத்தைந்து தத்துவங்களும்; தானுகவே சக்தி பீஜமாயிருப்பது கொண்டு, ஐந்துவித சக்திகளுடைய வடிவான சித்-ஆநந்த-இச்சா-ஞான-க்ரியா என்ற சக்திகளுடைய தத்துவங்களும்; மேலும் கீழுமாக பிந்துவின் வடிவாயமைந்த விஸர்க்கத்தைக் கொண்டு, ஸமஸ்ததத்துவங்களுடைய ஆவிர்ப்பாவ (உத்பத்தி) திரோபவங் (மறைவு) களுக்கு இருப்பிடமாகிய ஸ்ரீ பரமசிவபராபட்டாரிகையாயிருக்கிற ப்ரதாந (முக்யப்) தத்துவமும் அடங்கியிருக்கிறது.

"எவ்விதம் பெரிய ஆலமரத்தினுடைய சிறிய வித்தினுள்ளே வித்தின் சக்திவடிவான பெரியவிருக்ஷம் அடங்கியுள்ளதோ, அவ்விதமே ஹ்ருதய பீஜத்தினுள்ளே அதனுடைய சக்தியின் தோற்றமாகிய இச்சராசரங்களும் அடங்கியிருக்கின்றன"[1] என்பதும் திரண்டஸாரமாகும். (1)

(அவதாரிகை)

இவ்விதம் முதல் ச்லோகத்திலே ஸ்ரீத்ரிபுரா மந்த்ரத்தையும், அதனுடைய தேவதையையும், அந்த தேவதையை உபாஸிக்க வேண்டிய ஸ்தாநங்களையும் (இருப்பிடங்களையும்) பொதுவாகச் சொல்லி, அவைகளுடைய விசேஷங்களை விளக்கக் கருதி, நாத-பிந்து-பீஜபேதத்தால் மூன்று விதமாயிருக்கின்றதும், முதல் பீஜத்திலே நிஷ்கலம், ஸகலம், நிஷ்கலஸகலம், என மூன்று

---

1 यथा न्यग्रोधबीजस्थशक्तिरूपो महेश्वरः ।
तथा हृदयबीजस्थं जगदेतच्चराचरम् ॥ मानस-

விதங்களாகப் பிரிந்திருக்கின்ற தேவதைகளுடைய பெருமையும் அடுத்துவரும் இரண்டு ச்லோகங்களிலே விளக்கப்படுகின்றன.

**या मात्रा त्रपुसीलतातनुलसत्तन्तुस्थितिस्पर्धिनी**
**वाग्बीजे प्रथमे स्थिता तव सदा तां मन्महे ते वयम् ।**
**शक्तिः कुण्डलिनीति विश्वजननव्यापारबद्धोद्यमां**
**ज्ञात्वेत्थं न पुनः स्पृशन्ति जननीगर्भेऽर्भकत्वं नराः ॥ २ ॥**

(பதவுரை)

**हे देवि** - ஒளிமிகுந்தவளே ; ஓ தாயே ; **तव** - உன்னுடைய; **प्रथमे**-முதலாவதாகிய; **वाग्बीजे**-வாக்பவபீஜத்தில் **त्रपुसी-लता-तनु-लसत्-तन्तु-स्थिति-स्पर्धिनी**-வெள்ளரிக் கொடியின் நுனியில் மெல்லியதாகப் பிரகாசிக்கின்ற நூல் போன்ற இளங்கொடியின் இருப்பை வெல்லுகின்ற ; **या**-யாதொரு; **मात्रा**-கலையானது; (சைதன்யத்தின் ஒரு அம்சம்) **स्थिता**-இருக்கின்றதோ; **विश्व-जनन-व्यापार-बद्धोद्यमाम्**-உலகத்தினுடைய ஸ்ருஷ்டித் தொழிலைச் செய்வதற்கு எடுத்த முயற்சியையுடையதான; **ताम्**-அக்கலையை ; **कुण्डलिनी-शक्तिः-इति**-குண்டலினீ சக்தி என்று; **सदा**-எப்பொழுதும்; **ते**-உன்னுடைய; **वयम्**-(பக்தர்களாகிய) நாங்கள்; **मन्महे**-நினைக்கின்றோம்; **नराः**-மனிதர்கள்; **इत्थम्**-இவ்விதம்; **ज्ञात्वा**-அறிந்து (கொண்டால்) **जननी-गर्भे**-அன்னையின் கருப்பையில் ; **पुनः**-மறுபடியும் ; **अर्भकत्वम्**-குழந்தையாயிருக்கும் தன்மையை; **न-स्पृशन्ति**-அடையமாட்டார்கள்.

(பொழிப்புரை)

ஓ மஹாதேவி ! உன்னுடைய திருமேனியினுடைய மூன்று பீஜங்களில் முதலாவதான வாக்பவபீஜத்தில் (ऐं-ஐம்

என்ற அக்ஷரத்தில்) வெள்ளிக் கொடியின் நுனியில் நூல் போல விளங்குகின்ற மெல்லியதும், மிருதுவானதுமான இளங்கொடியைப் பழிக்கின்ற யாதொரு கலையின் அம்சமிருக்கின்றதோ, அக்கலையை, ப்ரபஞ்சத்தை நிர்மாணம் செய்யும் முயற்சியிலே ஈடுபட்டிருக்கின்ற குண்டலிநீ சக்தியென உனது பக்தர்களாகிய நாங்கள் எப்பொழுதும் நினைக்கின்றோம். இவ்விதமே மற்ற மக்களும் அறிந்துகொண்டால் பிறவிக்கடலைக் கடக்கக் காரணமாக இருக்குமல்லவா?

(விரிவுரை)

ஸ்ரீ த்ரிபுரஸுந்தரியினுடைய திருமேனியின் பீஜங்களிலே முதன்மையானதும், வெள்ளிக் கொடியின் நுனியில் கொஞ்சம் நீண்டு சுருண்டு பல வளைவுகளோடு கூட நூல் போல மெல்லியதாயும், வெண்ணிறத்தோடு மிருதுவாயும், யோகிகளுக்கே அநுபவத்தில் காணக்கூடியதாயும், குண்டலிநீ சக்தியெனச் சொல்லப்படுவதும், நாதத்தோடு கூடிய பிந்துவின் வடிவாயும் அமைந்த யாதொரு கலையின் அம்சமானது; சப்தப்ரபஞ்சத்திற்குக் காரணமாயுள்ளதோ, அக்கலாசக்தியை மற்றவர்களும் உண்மையிலறிந்துகொண்டால் பிறவிக் கடலைக் கடந்து ஜீவன் முக்தி பெறக்கூடுமென்பது கருத்தாகும்.

அழிவற்று என்றும் நிலைத்திருக்கின்ற மோக்ஷஸாதனத்தை உபதேசம் செய்யும் இந்த ச்லோகத்திலே ஸ்ரீ தேவியினுடைய முதல் பீஜத்திலுள்ள சப்தப்ரபஞ்ச வடிவமான நாதத்தோடு கூடிய பிந்துவின் உபாஸனை சொல்லப்படுகிறது என்பது ஸாரமாகும்.

இங்கே; தேவி (देवि) என்ற பதத்தை அடுத்த ச்லோகத்திலிருந்து வருவித்துக் கொள்ளவேண்டும். தேவி என்னும்

பதத்திற்கு, பிரப்பஞ்சத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அநுக்ரஹமென்னும் ஐந்து தொழில்களையும் தன்னிடத்திலே நிலைக்கப் பெற்று, தானே அவைகளை இயங்கச் செய்பவள் என்ற பொருளாகும். இங்கே 'திவ்' (दिव्) என்ற வினைச்சொல்லுக்குப் பல பொருள்கள் இருந்தாலும், க்ரீடா (क्रीडा-விளையாடுதல்) என்ற பொருள் இங்கே வழங்கியிருக்கின்றதெனக் கொள்ளவேண்டும்.

முதல் ச்லோகத்தில் சொல்லிய மூன்று பீஜாக்ஷரங்களில் முதலாவதாகிய ஐம் (ऐं) என்பதில் ஐகாரம் பிந்து என இரண்டு பிரிவுகளுண்டு. அதில் ஐகாரமானது, 'அ-ஏ' (अ-ए) என்பவற்றின் சேர்க்கையேயாம். 'அ' என்பது மூலாதாரத்தோடு சேர்ந்த ஆதார சக்தியையும், 'ஏ' என்பது 'அ. இ' எனப்பிரிந்து அதிலும் இரண்டு பிரிவாகும். 'ஆ' என்பது 'அ. ஆ.' என் இரண்டு அவயவத்தோடும், 'ஈ' என்பது 'இ. ஈ. ஈ.' என மூன்று அவயவத்தோடும் கூடியதாகச் செய்ய வெண்டும்.

இவைகளில், அ. ஆ. இ. ஈ. என்ற நான்கும் மூலாதாரத்தினுடைய தளங்களாகவும், எஞ்சிய ஈகாரத்தை த்ரிகோணமாகவும், அநுஸ்வாரத்தை மூலாதார த்ரிகோணங்களுடைய ஒற்றுமையை-சேர்க்கையைக் - குறிப்பாதாகவும் கொண்டால் வாக்பவபீஜத்திற்கு மூலாதாரத்திலுள்ள நான்கு தளங்களோடு கூடிய கமலத்தின் நடுவேயுள்ள த்ரிகோணமெனப் பொருள் கிடைப்பதாகும்.

இக்கருத்தையே " ஸித்தர்களால் வணங்கப்படுகின்ற ஹே புநிதே! ஹே மஹேச்வரி! அவ்விடத்தில் நான்கு தளங்களுடன் கூடியது மூலாதாரகமலம். அதனுடைய நடுவே இருப்பது த்ரிகோணம். அந்தர் யாகத்திலே (ஸமாதிநிஷ்டை)

அக்கமலத்தினிடத்தில் அபிவ்யக்தியை (பிரகாசம்) யடையக் கூடும்"[1] எனப் பவநஸம்ஹிதையிலும்; "மூலாதார கமலத்தின் கர்ணிகையுடைய நடுவிலிருக்கின்ற த்ரி கோணத்தில் ஸர்வஸித்திகளையுமளிக்கவல்ல குண்டலினீ என்ற பெயரோடு கூடிய சக்தியுள்ளது"[2] எனச் சைவாகம ரஹஸ்யத்திலும் வர்ணித்திருக்கிறது.

'மாத்ரா' (**मात्रा**) என்ற பதத்திற்கு நாதத்தோடு கூடிய பிந்துவின் வடிவமான கலையெனப் பொருள் கொள்ள வேண்டும். இவ்விதம் பரா(**परा**)வடிவாயிருக்கின்ற கலையே தான், பச்யந்தீ (**पश्यन्ती**) என்பதுமாகும். முதல் பீஜத்தி லுள்ள கலையானது பச்யந்தீ* என அறியத்தக்கதாகும். இக்

---

१ आधारकमलं तत्र चतुर्भिः सहितं दलैः ।
तस्य मध्ये महाभागे योनिः सिद्धनमस्कृते ।
तस्यामेव्यत्यभिव्यक्तिमन्तर्यागे महेश्वरि । (पवनसंहिता)

२ आस्ति कुण्डलिनी नाम शक्तिराधारपङ्कजे ।
कर्णिकामध्यभागस्थे त्रिकोणे सर्वसिद्धिदा ॥ (शैवागमरहस्ये)

*பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என வாக்குகள் நான்கு. அவை களில் பரா என்பது வேறு அபேக்ஷயின்றி நான் என்ற நினைப்பின் நிறைவான பராசக்தி அல்லது பரமாநந்த வடிவாயமைந்த ஸ்வதந்த்ர சக்தியாகும்.

பச்யந்தீ என்பது எங்கே வாச்யவாசகமானது வரிசையாகத் தோன்றாது பிரிவானது தெளிவுறாது இருக்கின்றதோ அவ்விடம் பராசக்தி சித்தின் முக்யத்தால் காணப்படுவதாகும்.

மத்யமா என்பது வாச்யவாசகத்தின் வரிசைகள் பிரிந்திருந்தாலும், தெளிவுற்றும், தெளிவற்றதுமாயிருந்து கொண்டு புத்திக்கு மாத்திரம் விளக்கமாயுள்ளதாம். இது பராசக்தியினுடைய பார்வையின் (தோற்றம்) முக்யத்தால் த்ருஷ்டரு த்ருச்யத்திற்கு நடுவேயிருக்கும் தன்மையாகும்,

வைகரீ என்பது சிரவணேந்த்ரியத்திற்கு புலப்படுவதும், யாவராலும் பேசப்படுவதுமாம்.

கலையையே தான் ஸமஸ்தவாங்மயங்களுக்கும் (சப்தங்களின் வடிவாயுள்ள) ஸநாதனமான (பழமை) காரணமாயிருப்பது "[1] எனவும் வர்ணித்திருக்கிறது.

**विश्वजननव्यापारबद्धोद्यमाम्**—பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்ரியை என்பதை சப்தப்ரஹ்மத்தோடு கூடச் சொல்லுவதாக இருந்தால் அகாரம் முதலிய அக்ஷரங்களுடைய உத்பத்திக்கும் காரணமெனக் கிடைக்கின்றது. ஆகவே முதல் பீஜமான (ऐ) ஐகாரத்திற்கு வாக்பவம் என்ற பெயரும், இதையே கலாரூபமான குண்டலினீசக்தியெனவும் சொல்லப்படுகிறது.

" இந்த குண்டலினீசக்தியானது வேறு சிலரால் 'பச்யந்தீ' எனவும் சொல்லப்படுகிறது." எனச் சைவாகமரஹஸ்யம்[2] கூறும்.

(**ते-वयम्**) 'தே-வயம்' என்றதால் உன்னுடைய பக்தர்களல்லாத மற்றவர்கள் இக்கலையின் வடிவாயுள்ள உனது ஸ்வரூபத்தைக் காணமுடியாது எனவும் கிடைக்கின்றது. (**ज्ञात्वा-इत्थम्**) 'ஞாத்வா-இத்தம்'—இவ்விதமறிந்து' என்றதால் குண்டலினீசக்தியின் உபாஸனையினுடைய அநுபவஸம்ப்ரதாயத்தை வாக்கினால் மாத்திரம் சொல்லப்பட்டாலும், முன்பு கூறிய கலையை பரா-பச்யந்தி முதலியதேவதைகளுடைய வடிவாக, ஐம்பது அக்ஷரங்களிலும் பரவி நின்று அவைகளுடைய உத்பத்திக்கும்

---

1 **कला प्रथमबीजस्था पश्यन्तीत्यवधारय ।**
**इयमेव पराशक्तिर्वाचोयोनिः सनातनी ॥ इति**

2 **" एषा कुण्डलिनीशक्तिः पश्यन्ती कैश्चिदुच्यते "** (**शैवागमरहस्ये**)

காரணமாகவுள்ள குண்டலிநீசக்தியெனத் தன்னோடு அபேதமாகப் பாவித்து நன்றாக உபாஸனை செய்து ஸித்தி யடைந்த ஒருவன் மறுபடியும் தாயின்கர்ப்பவாஸமென்னும் பிறவித்துன்பத்தை யொழித்து அழிவற்ற ஜீவன்முக்தி நிலையை யடைகின்றான் என்பதும் இந்த ச்லோகத்தி னுடைய திரண்ட பொருளாகும். (2)

(அவதாரிகை)

முன் ச்லோகத்திலே வாக்பவபீஜத்தினுடைய சிறப் பானது கூறப்பட்டது. மறுபடியும் அந்த வாக்பவத்தையே, ஸத்யவ்ரதன் என்னும் பக்தனுடைய கதையின் வாயிலாக இந்த ச்லோகத்திலே சிறப்பாகச் சொல்லப்படுகிறது.

**दृष्ट्वा संभ्रमकारि वस्तु सहसा ऐ ऐ इति व्याहृतं**
**येनाकूतवशादपीह वरदे बिन्दुं विनाप्यक्षरम् ।**
**तस्यापि ध्रुवमेव देवि तरसा जाते तवानुग्रहे**
**वाचः सूक्तिसुधारसद्रवमुचो निर्यान्ति वक्त्रोदरात् ॥ ३ ॥**

(பதவுரை)

**हे वरदे** - வரத்தைக் கொடுப்பவளே! ஹே தாயே! **इह** - இவ்வுலகில்; **येन** - எவனொருவனால்; **सहसा** - சீக்கிரமாக; **संभ्रमकारि** - பரபரப்பை யுண்டாக்கக்கூடிய; **वस्तु** - பொருளை; **दृष्ट्वा** - பார்த்து; **आकूतवशात्**-அபிப் பிராயத்தின் காரணமாக; **ऐऐ** - ஐஐ; **इति** - என்ற; **अक्षरम्** - அக்ஷரமானது; **बिन्दुम्** - பிந்துவை-அநுஸ்வா ரத்தை; **विना** - விட்டதாக; **व्याहृतम्-अपि** - உச்சரித்த பொழுதிலும்; **हे देवि** ! ஓ தாயே! **तस्य-अपि** - அவனுக் கும்; **तव** - உன்னுடைய; **अनुग्रहे** - அநுக்ரஹமானது;

**जाते** - உண்டாகும் பொழுது ; [ **सूक्ति - सुधा - रस - द्रव-मुचः**—நல்லவார்த்தை யென்னும் அம்ருத ரஸத்தைப்பொழி கின்ற ; **वाचः** - வாக்குகள் ; **वक्त्र- उदरात्** - முகத்தி லிருந்து ; **तरसा** - வேகத்தோடு ; **निर्यान्ति** - வெளிவருகின் றன ; **ध्रुवम् - एव** - நிச்சயமே.

(பொழிப்புரை)

பக்தர்கள் விரும்பும் வரத்தைக் கொடுப்பவளே! எங்கும் ஒளியின் வடிவாய் நிறைந்து நிற்பவளே! ஒதாயே! எவனொருவன் முன்பின் ஆராய்ந்து அறியாது அவஸரத்தில் பரபரப்பை யுண்டுபண்ணுகிற ஏதேனுமொரு வஸ்துவைக் கண்ட காரணத்தாலெழுந்த உனது பீஜமான 'ஐ ஐ என்னும் அக்ஷரத்தை, அநுஸ்வரத்தைத் (பிந்துவை) தள்ளி சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட நியமங்களுமில்லாது உச்சரித் தாலும், அவனுக்கும், உன்னுடைய கருணையினால் மிகுந்த வேகத்தோடு, தெளிந்ததும், அம்ருதம் போலச்சுவை யுள்ளதுமான மங்களவார்த்தைகளின் பெருக்கானது அவனுடைய வாக்கிலிருந்து உண்டாகுமே யாகில், விதிப்படி (சாஸ்த்ரமுறைப்படி) பொருளறிந்து உனது மந்த் ரத்தைப் பாராயணம் செய்பவனுக்குச் சிறந்த அநுக்ரஹ மேற்படுமென்பதில் எள்ளளவும் ஐயமில்லை யன்றோ!

(விரிவுரை)

ஸத்யவ்ரதன் என்னும் ஒரு அந்தணன் வனத்தில் தவம் செய்து கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு வேடன் மிகவும் அச்சத்தை யுண்டுபண்ணக்கூடிய ஒரு காட்டுப் பன்றியைத் துரத்திக்கொண்டு தவம் செய்யும் அந்தணன்

அருகில் வந்தான். அவனைக்கண்ட அந்தணனும் அச்சத்தால் நடுங்கி நிலைதவறி 'ஐ ஐ' என்று உரக்கக் கதறினன். இவ்விதம் அவ்வந்தணன் வாக்கினின்றும் வெளிவந்த ஐகாரமானது ஸ்ரீதேவியினுடைய அநுஸ்வாரத்தோடு கூடாத பீஜாக்ஷரமாகும். அவனும் அநுஸ்வாரமின்றி இதை உச்சாரணம் செய்கிறேமே என்ற எண்ணம் ஒரு சிறிது மில்லாது பரபரப்போடு உச்சரித்துக்கொண்டு அலைந்தான். அந்த ஐகாரமானது, ஸ்ரீதேவியினுடைய பீஜாக்ஷரங்களின் ஒரு பகுதியாயிருக்கும் காரணத்தாலே, அவனை ஸ்ரீதேவியின் கடாக்ஷத்திற்குப் பாத்திரமாக்கி மிகுந்தவாக்கின் வன்மையை (கவிதையின் பெருக்கை) அடையச்செய்தது.

அவ்விதமிருக்க மிகுந்த நியமத்தோடு பொருளறிந்து, இதிப்படி தேவியினுடைய பீஜாக்ஷரங்களை ஒருவன் ஜபம் செய்துவந்தால் அவனுக்குக் கவிதையின் பெருக்கும், மற்றுமுள்ள பலன்களும் கிடைக்குமென்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை யென்பது கதையின் ஸாரமாகும். இந்த ஸத்யவ்ரதனுடைய சரித்திரம் ஸ்ரீதேவீபாகவதத்தில் மூன்ருவது ஸ்கந்தத்தில் 10, 11 வது அத்தியாயங்களில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

முன் ச்லோகத்திலே நாதத்தோடு கூடிய பிந்துவின் உபாஸனையானது மோக்ஷத்தைக் கொடுக்கவல்லது என்று சொல்லப்பட்டது. இந்த ச்லோகத்திலே பீஜாக்ஷரத்தின் உபாஸனையினுலுண்டாகும் வாக்ஸித்தியின் (வாக்கின் வச்யம்) வடிவாயமைந்த பலத்தையும் சொல்லப்பட்டது என்பதும் ஸாரமாகும். (3)

(அவதாரிகை)

இனி இரண்டாவது பீஜத்திலும் ஸாரஸ்வத (அறிவு) பலமானது பீஜத்தினுடைய ஒரு பகுதிக்கா, அல்லது பீஜத்தினுடைய முழுப்பகுதிக்குமா என்பதை இந்த ச்லோகத்திலே விளக்கப் படுகிறது.

**यन्नित्ये तव कामराजमपरं मन्त्राक्षरं निष्कलं**
**तत्सारस्वतमित्यवैति विरलः कश्चिद् बुधश्चेद् भुवि ।**
**आख्यानं प्रतिपर्व सत्यतपसो यत्कीर्तयन्तो द्विजाः**
**प्रारम्भे प्रणवास्पदप्रणयिनीं नीत्वोच्चरन्ति स्फुटम् ॥ ४ ॥**

(பதவுரை)

**हे नित्ये** - அழிவற்று (முக்காலத்திலும்) நிலைத்திருப்பவளே! **कामराजम्** - காமராஜமென்னும் பெயரோடு கூடிய; **अपरम्** - மற்றொரு; **तव** - உன்னுடைய; **यत्** - யாதொரு; **मन्त्राक्षरम्** - மந்த்ரத்தின் இரண்டாவது அக்ஷரமிருக்கின்றதோ; **तत्** - அந்த அக்ஷரத்தை; **निष्कलम्** - ககார லகாரங்களோடு கூடாத; **सारस्वतम्**- ஸ்ரீஸரஸ்வதீ தேவியின் ஸம்பந்தமானது; **इति** என்று; **भुवि**- உலகில்; **विरलः** - ஞானசூன்யனை; **कश्चित्** - ஒருவன்; **अवैति** - **चेत्** - அறிந்து கொண்டாலும்; **सः** - அவன்; **बुधः** - அறிவு நிறைந்த வித்வானாக ஆகின்றான். **सत्यतपसः** - ஸத்ய தபஸ் என்ற மஹர்ஷியினுடைய; **आख्यानम्** - கதையை; **प्रति-पर्व** - ஒவ்வொரு பர்வத்திலும்; **कीर्तयन्तः** - பாராயணம் செய்கின்ற; **द्विजाः** - அந்தணர்கள்; **प्रारम्भे** - முதலில்; **यत्** - யாதொன்றை (காமராஜ பீஜத்தை) **प्रणवास्पद-प्रणयिनीम्** - பிரணவத்தினுடைய (ஓம்காரத்திற்கு) இருப்

பிடமாயிருக்கும் தன்மையை விரும்புகின்ற; - ஈம்- என்று (ஈகாரத்தோடு கூடிய அநுஸ்வாரத்தை மட்டும் மந்த்ரத்தின் வடிவாக) **नीत्वा** - செய்து; **स्फुटम्** - தெளிவாக; **उच्चरन्ति** - உச்சாரணம் செய்கின்றனர்.

(பொழிப்புரை)

முக்காலத்திலும் அழிவற்று ஞானவடிவாக இருந்து கொண்டு நித்யமாக விளங்குகின்ற அன்னையே! உனது மற்றொரு பீஜாக்ஷரமான காமராஜபீஜத்தை ககார லகாரங்களோடு சேர்க்காது ஈம் (**ईम्**) என்ற கடைசிபாகத்தை மாத்திரம் ஸ்ரீஸரஸ்வதிதேவியின் ப்ரஸாதமென்று உலகத்தில் ஞானமில்லாத ஒரு சிறுவனும் அறிந்து கொண்டால் அவனும் அறிவு நிறைந்த பண்டிதனாகின்றான். ஒவ்வொரு பருவத்திலும் (பௌர்ணிமா) ஸத்யதபஸ் என்ற மஹர்ஷியினுடைய சரித்திரத்தைப் பாராயணம் செய்கின்ற அந்தணர்கள் ஓம்காரத்தினுடைய இருப்பிடத்தை யடைய விருப்பம் கொண்டு ஆரம்பத்தில் 'ஈம்' (**ईम्**) என்பதை மட்டிலும் உச்சஸ்வரத்தில் உச்சரிக்கின்றனர்.

(விரிவுரை)

அறிவில்லாத ஒரு சிறுவனும் ககாரலகாரங்களைத் தள்ளி இது ஸ்ரீஸரஸ்வதிதேவியினுடைய அருளைக் கொடுக்கவல்லது என விசாரித்துத் தெரிந்து கொண்டு ஈம் என்ற ஈம்காரத்தை யுபாஸித்தால் அவனும் மஹாஞானியாகின்றான். மற்றும் பிரணவத்திற்கு ஸமானமான இந்த ஈம்காரோபாஸனையானது மோக்ஷத்தையும் கொடுக்க வல்லது. இக்கருத்தை அருணோபநிஷத்தும்; "எவ

ஒருவன் ககார லகாரங்களோடு கூடாத ஈம் என்ற காம கலையை மாத்திரம் ஸ்ரீகுருவினிடமிருந்து உபதேசம் பெற்று உபாஸனை செய்கிருனே, அவன் ககாரலகாரங் களோடு கூடிய காமராஜபீஜத்தினுடைய மஹிமையால் மூன்று உலகமும் வசீகரண மாகக்கூடிய சக்தியைப்பெறு கிருன். மற்றும் த்வைதப்ரபஞ்சரூபமான ஸம்ஸார பந்திதத்திலிருந்து விடுதலை யடைவதோடு ப்ரஹ்மாநந்த வடிவாகவும், நித்யமாகவு முள்ள மோக்ஷத்தையு மடை கிருன்."* எனக்கூறும்.

முன்னொரு காலத்தில் ஸூர்யவம்சத்திலே பிறந்த ஸுதர்சனன் என்ற அர்சனும் இந்த காமராஜபீஜத்தையே உபாஸித்து, ஸ்ரீதேவியினுடைய அநுக்ரஹத்தைப் பெற்று சக்ரவர்த்தி பதவியையும் அடைந்தான் என்ற கதையையும் ஸ்ரீ தேவீபாகவதத்தில் மூன்ருவது ஸ்கந்தத்தில் 10 வது அத்யாயம் முதல் 24 வது அத்தியாயம் வரையில் விரிவாகக் காணலாம். (4)

(அவதாரிகை)

இவ்விதம் முன் ச்லோகத்திலே காமராஜ பீஜத்தினு டைய சிறப்பானது சொல்லப்பட்டது. இப்பொழுது இந்த ச்லோகத்திலே ஸம்மோஹன மென்னும் சக்தி பீஜத் தினுடைய பெருமையானது விளக்கப் படுகிறது.

**यत्सद्यो वचसां प्रवृत्तिकरणे दृष्टप्रभावं बुधैः**
**तातीयं तदहं नमामि मनसा त्वद्बीजमिन्दुप्रभम् ।**
**अस्त्वौर्वोऽपि सरस्वतीमनुगतो जाड्याम्बुविच्छित्तये**
**गौः शब्दो गिरि वर्तते स नियतं यो गं विना सिद्धिदः ॥ ५ ॥**

* மற்ற விசேஷங்களை எமது அருணோபநிஷத் தமிழுரையில் விரிவாகக்காணலாம்.

(பதவுரை)

**हे नित्ये** ! அழிவற்றவளே ! நித்தியமாக விளங்குபவளே ! **यत्** - யாதொரு பீஜாக்ஷரம் ; **सद्यः** - உடனே ; **वचसाम्** - வார்த்தைகளுடைய ; **प्रवृत्तिकरणे**- நிர்மாணவிஷயத்தில் ; (வெளிவரச்செய்வதில்) **बुधैः** - பண்டிதர்களினால் ; **दृष्टप्रभावम्** - கண்ணால் காணப்பட்ட மஹிமையோடும் ; **तार्तीयम्** - மூன்ருவதாக உள்ளதும் ; **इन्दुप्रभम्** - சந்த்ரனைப்போன்ற காந்தியோடு கூடியதுமாகிய ; **तत्** - அந்த ; **त्वत्** உன்னுடைய ; **वीजम्** - பீஜாக்ஷரத்தை ; **अहम्** - நான் ; **मनसा** - மனதால் ; **नमामि** - வணங்குகிறேன். **यः** - யாதொரு; (பீஜாக்ஷரமானது) **गौः**- கௌ : (என்ற) **शब्दः** - சப்தமானது ; **गिरि** - ஸ்ரீஸரஸ்வதீதேவியினிடத்தில் வாசகமாக ; **वर्तते** - இருக்கின்றதோ ; **यः** - யாதொரு சப்தமானது ; **गं** - (ग) ககாரத்தை ; **विना**- விட்டு ; (ஔ:) (**औः**) என்று மாத்திரம் ; **सिद्धिदः** - ஸித்தியைக் கொடுக்கின்றதாயிருக்கின்றதோ ; **सरस्वतीम्** - ஸ்ரீஸரஸ்வதீதேவியை ; **अनुगतः** - அநுஸரித்த ; **सः** - அந்த ; **औः - अपि** - ஔகாரம் என்ற ஸ்வரமும் ; **वः** உங்களுடைய ; **जाड्य-अम्बु** - **विच्छित्तये** - அஜ்ஞானமாகிற-ஜலத்தை-வற்றவைப்பதற்கு ; **नियतम्** - நிச்சயமாக ; **अस्तु** - இருக்கட்டும்.

(பொழிப்புரை)

அழிவற்றவளே ! ஓ தாயே ! யாதொரு பீஜாக்ஷரமானது மாதுர்யம் முதலிய குணங்களோடு கூடிய வார்த்தைகளின் பெருக்கை வெளிவரச் செய்கின்ற கவிதையின் காரணமாகப் பண்டிதர்களால் அநுபவித்துக்

காணப்படுகின்ற சிறப்பு வாய்ந்ததாகவும்; சந்த்ரனுடைய காந்தியைப்போல வெண்மையாகவும்; ஸ்ரீ தேவியினுடைய வாசமாக வுமுள்ளதுமான உனது பீஜாக்ஷரத்தை (ஸௌ: என்ற அக்ஷரத்தை) நான் மனதால் வணங்குகிறேன். மூன்ருவது பீஜாக்ஷரத்திலுள்ள யாதொரு ஔ: என்ற ஸ்வரமானது ஸௌ: என்ற சப்தமாகத்திரிந்து ஸ்ரீஸரஸ்வதீ தேவியின் வாசகமாயுள்ளதோ; யாதொரு பீஜாக்ஷர மானது ககாரத்தோடும் சேர்ந்து ஔ: என்று தனித்து நின்றுகொண்டு ஸகல ஸித்திகளையுமளிக்க வல்லதாயிருக் கின்றதோ; அந்த ஔ: என்ற ஸ்வரவடிவாயுள்ள பீஜாக்ஷர மானது ஸ்ரீஸரஸ்வதீதேவியை யநுஸரித்ததாக இருந்து கொண்டு உங்களுடைய அஜ்ஞானமாகிற ஜலத்தை வற்ற வைப்பதற்கு (மோஹப்ரவாஹத்தை நாசம் செய்வதற்கு) நிச்சயமாக இருக்கக்கடவது.

(விரிவுரை)

இந்த ஸௌ: என்ற பீஜாக்ஷரத்திலேயுள்ள ஔ:என்ற ஸ்வரமானது ககாரத்தோடு சேரும்பொழுது கௌ: (गौः)- என்ற ஸ்ரீஸரஸ்வதீதேவியினுடைய வாசகத்தைக் குறிக் கின்ற பீஜாக்ஷரமாகக் கிடைக்கின்றது; ஈகாரத்தையும் சேர்க்காது ஔ: என்று தனியாக இருக்கும் பொழுது பாடவாக்நி மந்த்ரமாகவு மிருக்கின்றது. அஜ்ஞானமாகிற ஸமுத்ரத்தை வற்றவைப்பதற்கு பாடவாக்நியே சக்தி வாய்ந்தது. பீஜாக்ஷரத்தினுடைய ஒரு பகுதியான ஔ: என்ற ஸ்வரத்திற்கு இவ்வளவு சிறப்பு இருக்குமேயாகில் பரிபூர்ணமான மூன்ருவது பீஜாக்ஷரத்திற்கு (ஸௌ:)

எவ்வளவு சிறப்பு இருக்குமென்பது சொல்லாமலே விளங்கும்.[1]

**(दृष्टप्रभावम्)** த்ருஷ்டப்ரபாவம் — என்றதால் இந்த ஸௌ: என்ற பீஜமானது மிகவும் வேகமான வாக்ப்ரவாஹத்தை யுண்டு பண்ணக்கூடிய சக்தி வாய்ந்தது எனக் கிடைக்கின்றது. மற்றும் அநேக வித்வான்கள் இந்த வாக்பவத்தை உபாஸனை செய்து பலன்களை யடைந்தனர் என்றும், அறிவற்ற ஒரு சிலருக்குப் பலன் கிடைக்காமலிருந்தாலும், அது அநுபவ மடைந்தவர்களுக்கு விரோதமாயிருக்காது. உபாஸகனாகிய கவிக்கு அவனுடைய மனவுறுதியையும், அஜ்ஞானிகளைக் குறித்த உதாஸீநத்தையும் வெளிப்படுத்துவதாகும்.

**(मनसा नमामि)** மநஸா-நமாமி—என்றதால் மனம் கொண்டு நமஸ்காரம் செய்கிறேன் என்றதால் சிலஸமயம் சிலருக்குப் பலன்கள் கிடைக்காமலும் இருக்கலாமென்றால் அதற்குக் காரணம் அவர்களுடைய மனச்சஞ்சலமேயாகுமென்பதையும் விளக்குவதாகும். "பாடவாக்னியினுடைய விஸர்க்கமான ஔகாரமானது பீஜத்தன்மையை யடைகிறது"[2] என்ற பிரமாணத்தை யநுஸரித்து பாடவாக்நி பீஜமாகவும் கொண்டால், எவ்விதம் பாடவாக்நியானது ஜலத்தை வற்ற வைக்குமோ அதுபோல இந்த ஔகாரமும் அஜ்ஞானத்தை யகற்ற வல்லது. இவ்விடத்தில் அஜ்ஞானத்தை ஜலமாக வர்ணித்திருப்பதும் பொருத்தமேயாகும்.

---

1. "பாலைக்கு மிஞ்சிய மந்திரமுண்டோ
நல்ல பாலுக்கு மிஞ்சிய பாக்யமுண்டோ"
என ஒரு ஸித்தர் பாடியிருப்பதும் இங்கு கவனிக்கத்தக்கது.

2. **औकारं बीजतां धत्ते वाडवस्य विसर्गवान्**"इति

ஆகவே இந்த ஸௌ: என்ற பீஜாக்ஷரத்தில் ஸ+ஔ: என்று இரண்டு அக்ஷரங்களுண்டு. அதில் இரண்டாவதாகிய ஔ: என்ற அக்ஷரம் 'ஸ' என்னும் அக்ஷரத்தோடு சேரும்பொழுது, வியாகரணஸூத்ரப் பிரகாரம் விருத்தி ஸந்திசெய்தால் ஸௌ: என்று ஆகின்றது. அப்பொழுது அந்த ஸௌ: என்னுமக்ஷரம் ஸ்ரீஸரஸ்வதீதேவியின் வாசகத்தைக் குறிப்பதாகக் கிடைக்கின்றது. அவ்விதமே ஸௌ: என்ற அக்ஷரம் ஸ என்ற அக்ஷரத்தோடு சேராமல் தனியே ஔ: என்றிருக்கும்பொழுது அதுவும் ஸ்ரீஸரஸ்வதீப்ரஸாதமான மந்த்ரமுமாகின்றது. ஆகவே இந்த மஹிமை வாய்ந்த ஔ: என்ற பீஜாக்ஷரமானது கேவலம் கவிதாசக்தியைப் பெறுவதற்கு மாத்திரம் உபாஸனை செய்யாது எல்லாவிதமான அவித்யைகளையும் அழித்து நித்யமான ஞானத்தையடைவதற்கும் உபாஸனை செய்வது அவச்யம் என்றும் கிடைக்கின்றது. (5)

(அவதாரிகை)

இவ்விதம் "**या मात्रा**" என்று ஆரம்பித்து நான்கு ச்லோகங்களிலே ஐம், ஈம், என்ற சுத்த ஸ்வரங்களை உபாஸனை செய்யும் லக்ஷணங்களையும், பூர்ணோபாஸனையின் பலன்களையும் விரிவாகச் சொல்லி, இந்த ஆருவது ச்லோகத்திலே, அந்த பீஜாக்ஷரங்களை எவ்விதம் ஜபம் செய்ய வேண்டுமென்பதையும் சொல்லப்படுகிறது.

**एकैकं तव देवि बीजमनघं सव्यञ्जनाव्यञ्जनं**
**कूटस्थं यदि वा पृथक्क्रमगतं यद्वा स्थितं व्युत्क्रमात् ।**
**यं यं काममपेक्ष्य येन विधिना केनापि वा चिन्तितं**
**जप्तं वा सफलीकरोति तरसा तं तं समस्तं नृणाम् ॥ ६ ॥**

(பதவுரை)

**हे देवि !** ஹே தேவி; **तव** - உன்னுடைய; **अनघम्** - தோஷமில்லாத (பரிசுத்தமான) **बीजम्** - பீஜாக்ஷரமானது; **एकैकम्** - ஒவ்வொன்றாகவோ; **सव्यञ्जनाव्यञ्जनम्** - மெய்யெழுத்துக்களுடன் சேர்ந்தும், சேராமலும்; **कूटस्थम्** - ஹகாராதிகளான கூடங்களில் இருப்பதாகவோ; **पृथक्** - தனியாகவோ; **क्रमगतम्** - க்ரமத்தை யநுஸரித்து; **यदि-वा** - இருந்தாலும்; **व्युत्क्रमात्** - க்ரமத்தையநுஸரிக்காமல் **स्थितम्** - இருந்தாலும்; **यं-यम्** - எந்த எந்த; **कामम्** - அபிலாஷையை (விருப்பத்தை) **अपेक्ष्य** - எதிர்பார்த்து (விரும்பி) **येन-केनापि** - ஏதாவதொரு; **विधिना** - விதியோடு கூட; (முறையோடு) **चिन्तितं - वा** - சிந்தனை செய்தாலும்; **जप्तं - वा**-ஜபம் செய்தாலும்; **नृणाम्** - மனிதர்களுக்கு; **समस्तम्** - எல்லாவற்றையும்; (விருப்பங்களையும்) **तरसा** - விரைவில்; **सफली-करोति** - நல்லபலனுள்ளதாக ஸித்தி பெறச் செய்கின்றது.

(பொழிப்புரை)

ஓ தாயே! கங்கையினுடைய ஜலம் போல மிகவும் பரிசுத்தமாயிருக்கின்ற உனது பீஜாக்ஷரமானது ஒவ்வொன்றாகவோ, மெய்யெழுத்துக்களுடன் கூடியதாகவோ, கூடாததாகவோ, இரண்டு முதல் ஆறு வரையிலுள்ள கூடாக்ஷரங்களோடு கூடியதாகவோ; அவ்விதம் கூடாததாகவோ; க்ரமத்தை அநுஸரித்திருந்தாலும், அநுஸரிக்காமலிருந்தாலும்; எந்த விதமான விருப்பத்தையுத்தேசித்திருந்தாலும்; எந்த விதிப்பிரகாரமாவது சிந்தனை செய்

தாலும்; ஜபம் செய்தாலும்; மனிதர்களுக்கு அந்தஅந்த அபிலாஷைகளையெல்லாம் இப்பிறவியிலேயே விரைவில் ஸித்தி பெறச் செய்கின்றது.

(விரிவுரை)

இவ்விடத்தில் 'தேவி' என்றதால் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதாநம், அநுக்ரஹம் என்ற ஐந்து தொழில்களையும் தன்னிடத்திலே நிலைக்கப்பெற்று ஸ்வயம்ப்ரகாச வடிவாயிருப்பவள் என்று தாத்பர்யம். (अनघम्) - அநகம்- பரிசுத்தம் என்றதால் தான் தோஷமற்றவளாயிருப்பது மன்றி, ஸகல ஜீவராசிகளையும் பரிசுத்தமாகச் செய்கின்ற சக்தி வாய்ந்தவள் என்றும் கிடைக்கின்றது. सव्यञ्जनाव्यञ्ज-नम् - மெய்யெழுத்துக்கள் சேர்த்தும், சேர்க்கப் படாமலும் என்ற பதத்தின் விசேஷம் வருமாறு; வடமொழியில் வியாகரணசாஸ்த்ரத்தில் அக்ஷரங்கள், ஸ்வரங்கள் (உயிர்) என்றும்; வ்யஞ்ஜநங்கள் (மெய்) என்றும் இரண்டு வகையாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. (अ-आ-इ-ई) அ. ஆ. இ. ஈ, என்று ஆரம்பித்து (औ-अं-अः) ஔ-அம்-அஃ-என முடிகின்ற அக்ஷரங்கள் ஸ்வரங்கள் (உயிரெழுத்துக்கள்) என கூறப் படும். (क् ख् ग् घ्) க் க் க் க் என்று ஆரம்பித்து (स् ह् क्ष्) ஸ்-ஹ்-க்ஷ் எனமுடிகின்ற அக்ஷரங்கள் வ்யஞ்ஜநம் (மெய்யெழுத்துக்கள்) எனப்படும். அவைகளை முறையே அச்செழுத்துக்கள் என்றும் ஹல்லெழுத்துக்கள் என்றும் கூறுவதுண்டு. இங்கே ஸவ்யஞ்ஜநம் என்றதால் மெய் யெழுத்துக்களோடு சேர்ந்தது என்று பொருள். அவ் யஞ்ஜநம் என்றதால் மெய்யெழுத்துக்களோடு சேராதது என்று பொருள்.

ஆகவே ஸௌ : என்ற பீஜாக்ஷரத்தில் ஸ+ஔ என்று ஒரு மெய்யெழுத்தும், ஒரு உயிரெழுத்தும் இருக்கிறது. ஔ : என்றதில் மெய்யெழுத்துச் சேராது உயிரெழுத்துத் தனித்து நிற்பதால் அது அவ்யஞ்ஜநம் எனச் சொல்லப் பட்டது. இவ்விதமே மற்ற விடங்களிலும் கண்டு தெளிதல் வேண்டும்.

மற்றும் (**कूटस्थम्**) - கூடஸ்தம்—என்றதால் மெய் யெழுத்துக்களுடைய 'ஸமுதாயத்தைக் குறிப்பதாகும். இக்கருத்தையே, முதல் ச்லோகத்திலே (**सदाहस्थिता**) - 'ஸதாஹஸ்திதா' என்ற பதவுரையில் அகாரம் முதல் ஹகாரம் வரையில் பரவி யிருப்பதாகச் சொல்லபட்டிருக்கிறது. இந்த கூடாக்ஷரங்கள் உயிரெழுத்துக்களுடன் இரண்டுமுதல் ஆறு வரையிலுள்ள மெய்யெழுத்துக்கள் சேர்த்தும் உச்சரிக்கப்படுவதுண்டு. (**पृथक्**) - ப்ருதக் - தனியே என்ற பதமானது கூடாக்ஷரங்கள் முழுவதையும், அவைகள் தனித்திருக்கின்ற நிலையையும் குறிப்பதாகும். தனித்திருக் காவிடில் தொடர்ந்தோ, தொடராமலோ இருக்கும். இந்த விதிகளனைத்தும் மெய்யெழுத்துக்களுக்கே யன்றி உயிரெழுத்துக்களுக்கு முண்டு.

(**यं यं काममपेक्ष्य**) - யம் யம் காமம் அபேக்ஷ்ய—எந்த எந்த காமனையை விரும்பி என்ற பதத்தால் உபாஸகர் களுக்கு மற்ற மந்த்ரங்கள் ஒரு குறிப்பிட்ட பலனைத்தான் கொடுக்க வல்லது. இந்த மந்த்ரமோவெனில், அவ்வித மல்லாது ஸகலபலன்களையுமளிக்கவல்லது என்பதும் கிடைக்கின்றது. (**येन केनापि विधिना**) - யேந-கேநாபி-விதிநா- எதாவது ஒரு முறையினால் என்றதால் மற்ற மந்த்ரங்களுக்கு

ரிஷி, சந்தஸ், அங்கந்யாஸம், கரந்யாஸம். குருபாதுகா ஸ்மரணம்; முதலிய சிற்சில விதிகளை யநுஸரித்து ஜபம் செய்தாலல்லது அவைகளுக்குரிய பலன்களை யடைய முடியாது. ஆனால் இம்மந்த்ரத்திற்கு அவ்வித விதிக ளொன்றும் வேண்டுவதில்லை யென்பதும் கிடைக்கின்றது.

**(चिन्तितं जप्तं वा)** சிந்திதம்-ஜப்தம்-வா—த்யாநம் அல்லது ஜபம் செய்தாவது என்றதால், "தேவதை, குரு, மந்த்ரம் இவைகளை த்யானம் செய்யும் பொழுதோ, ஜபம் செய்யும் பொழுதோ தன்னோடு ஒருமுகப்படுத்தி பாவனை செய்ய வேண்டும்"[1] என்பது போல உபாஸகர்கள் தேவதையை யும், குருவையும், மந்த்ரத்தையும், தன்னையும் ஒன்று சேர்த்து அபேதவடிவாகக் கருதி த்யாநம் செய்ய வேண்டு மென்பதும் கிடைக்கின்றது.

**(नृणाम्)** - ந்ருணாம்—மனிதர்களுக்கு என்றதால் இந்த மந்த்ரோபாஸனையில் ஆண் பெண் என்ற வேற்றுமையின்றி எல்லோரும் எல்லாவர்ணத்தவரும் எப்பொழுதும் உபாஸனை செய்வதற்குத் தகுதியுள்ளவர்க ளென்பதும் கிடைக்கின்றது.

ஆகவே இந்த மந்த்ரத்திற்கு அவச்யமாயுள்ள அங்கந் யாஸங்களையும், சரீரரக்ஷைகளையும், ப்ரயோகக்ரமங்களையும், அவைகளால் ஏற்படக்கூடிய பலன்களையும் விரிவாக ஸ்ரீஸிம்ஹராஜர், ஸ்ரீஸோமதிலகஸூரி, ஸ்ரீராகவாநந்தர் முதலியவர்களியற்றிய வியாக்யானங்களில் கண்டுகொள்ள வேண்டுவதாகும். (6)

---

[1] "देवतागुरुमन्त्राणां भावयन्नैक्यमात्मना।" इति।

(அவதாரிகை)

' **चिन्तितम् जप्तं वा** - 'சிந்திதம், ஜப்தம் வா,—த்யாநம் செய்தாவது ஜபம் செய்தாவது என்றதால், அந்த த்யாநத்திற்கும் ஜபத்திற்குமுரிய உருவத்தைச் சிந்தனை செய்ய, நிஷ்கலவடிவை, 'ஜ்யோதிர்மயீ வாங்மயீ' என்றும் உபதேசித்து, ஸகலநிஷ்கல வடிவாயிருப்பதை, 'ஐந்த்ரஸ்யேவ சராஸநஸ்ய' என்றும் உபதேசித்து, எஞ்சியுள்ள ஸகல வடிவானது இந்த ச்லோகம் முதல் ஐந்துச்லோகங்களிலே விளக்கப்படுகிறது.

**वामे पुस्तकधारिणीमभयदां साक्षस्रजं दक्षिणे**
**भक्तेभ्यो वरदानपेशलकरां कर्पूरकुन्दोज्ज्वलाम् ।**
**उज्जृम्भाम्बुजपत्रकान्तिनयनस्निग्धप्रभालोकिनीं**
**ये त्वामम्ब न शीलयन्ति मनसा तेषां कवित्वं कुतः ॥ ७॥**

(பதவுரை)

**हे अम्ब** - ஓ! தாயே! **वामे** - இடது கையில்; **पुस्तक-धारिणीम्** - புஸ்தகத்தைத் தரித்துக் கொண்டவளும்; **अभयदाम्** - அபயத்தை யளிக்கவல்ல முத்ரையைத் தரித்துக் கொண்டவளும்; **दक्षिणे** - வலது கையில்; **साक्षस्रजम्** - ஸ்படிகமாலையைத்தரித்துக் கொண்டவளும்; **भक्तेभ्यः** - பக்தர்களுக்கு; **वर-दान-पेशल-कराम्** - வரத்தைக்கொடுக்க வல்ல அழகிய வரதமுத்ரையைத் தரித்துக்கொண்டவளும்; **कर्पूर-कुन्द-उज्ज्वलाम्** - கர்ப்பூரம் போலும், முல்லைப்புஷ்பம் போலும் வெண்மையாகப் பிரகாசிக்கின்றவளும்; **उज्जृम्भ-अम्बुज-पत्र-कान्ति-नयन-स्निग्ध - प्रभा - आलोकिनीम्** - மலர்ந்த-தாமரை - புஷ்பத்தின் - காந்திபோன்ற காந்திபொருந்திய

வாத்ஸல்யம் நிறைந்து பிரகாசிக்கின்ற கடைக்கண் பார்வையோடு கூடியவளுமான ; **त्वाम्** - உன்னை ; **ये** - எந்த (மனிதர்கள்) **मनसा** - மனஸாலும் ; **न - शीलयन्ति** - த்யானம் செய்வதில்லையோ ; **तेषाम्** - அவர்களுக்கு ; **कवित्वम्** - கவிதை புனையும் சக்தியானது ; **कुतः** - எது ? (கிடையாது).

(பொழிப்புரை)

ஓ தாயே! (சப்தார்த்தங்களின் வடிவமாயிருக்கின்ற இந்த ப்ரபஞ்சத்திற்குத் தாய் போன்றவளே! ;) இடது கைகளில் புஸ்தகத்தையும், அபயமுத்ரையையும், வலது கைகளில் ஸ்படிகமாலையையும், பக்தர்களுக்கு வேண்டிய வரத்தை யளிக்கவல்ல வரதமுத்ரையையும், கர்ப்பூரம் போலும், முல்லைபோலும், வெண்ணிறத்தோடு ப்ரகாசிக்கின்றவளும்; மலர்ந்த தாமரைப்புஷ்பத்தின் காந்தி போன்ற கண்களில், வாத்ஸல்யம் ததும்பி ப்ரகாசிக்கின்ற கடைக்கண் பார்வையோடு கூடியவளுமான உன்னை, எந்த மனிதர்கள் மனதினாலும் த்யானம் செய்யவதில்லையோ, அவர்களுக்குக் கவிதாசக்தியானது எவ்விதம் உண்டாகும்? ஒரு பொழுதும் உண்டாகாது என்பதும் ஸாரமாகும்.

(விரிவுரை)

இந்த ச்லோகமானது மூன்று பீஜாக்ஷரங்களுக்கும் ஸாதாரணமாயிருக்கின்ற த்யான விசேஷத்தையும், ஸ்ரீ ஸரஸ்வதீதேவியின் ஸம்பந்தமான ப்ரயோகத்தையும் கொண்டதாகும். இந்த ச்லோகத்தின் கருத்தும், ஆநந்த லஹரியில் ; "**शरज्ज्योत्स्नाशुभ्राम्**" - "சரத் - ஜ்யோத்ஸ்நா - சுப்ராம்" - என்ற பதினைந்தாவது ச்லோகத்தின் கருத்தும்

ஒன்றுயிருப்பது கவனிக்கத்தக்கது. மற்றுமுள்ள விசேஷங்களை என்னுடைய "ஆநந்தலஹரீ" என்ற ஸௌந்தர்யலஹரியினுடைய-முதல்பாகத்தில் கண்டு தெரிந்துகொள்ளலாம். (7)

(அவதாரிகை)

முன் ச்லோகத்திலே மூன்று பீஜாக்ஷரங்களுக்குப் பொதுவானதும், ஸர்வஜ்ஞத்வரூபமான பலத்தைக் கொடுக்கவல்லதுமான வடிவத்தைச்சொல்லி, அடுத்துவரும் இந்தச் ச்லோகத்தில், சக்தி, காமராஜம், வாக்பவம், என்ற க்ரமத்தோடு கூடிய த்வாதசாந்தம், மூலாதாரம், ஹ்ருத்பத்மம் என்ற மூன்று ஸ்தானங்களிலும் த்யானம் செய்ய வேண்டிய ஸாதாரணவடிவமும், அதனுடைய பலமும் விளக்கப்படுகிறது.

ये त्वां पाण्डरपुण्डरीकपटलस्रग्राभिरामप्रभां
सिञ्चन्तीममृतद्रवैरिव शिरो ध्यायन्ति मूर्ध्नि स्थिताम् ।
अश्रान्तं [1]विकचस्फुटाक्षरपदा निर्याति वक्त्रोदरात्
तेषां भारति भारती सुरसरित्कल्लोललोलोर्मिवत् ॥ ८ ॥

(பதவுரை)

हे भारति-ஒளி மிகுந்தவளே, ஓதாயே; **पाण्डर-पुण्डरीक-स्रग्-अभिराम-प्रभाम्** - வெண்மையான தாமரைப் புஷ்பம் போல் மனோஹரமாயிருக்கின்ற காந்தியோடும்; **अमृत-द्रवैः**- அம்ருதத்தினுடைய பெருக்குகளால்; **शिरः** - சிரஸை; **सिञ्चन्तीम्** - நனைக்கின்றவளும்; **मूर्ध्नि**-மஸ்தகத்தில்; **स्थिताम्**-இருக்கின்றவளுமான; **त्वाम्**-உன்னை; **ये**-எந்த; (மனிதர்கள்) **ध्यायन्ति** - த்யானம் செய்கின்றனரோ; **तेषाम्** - அவர்

[1] **विकट**-உத்தரம்-என்பது ஸ்ரீஸோமதேவருடைய பாடம்.

டைய; **वक्त्र-उदरात्** - முகத்திலிருந்து; **विकच-स्फुट-अक्षर-पदा**-விரிந்ததும்; தெளிந்ததுமான அக்ஷரங்களோடு கூடிய பதங்களையுடைய; **भारती** - வாக்கானது; (கவிதாசக்தியானது) **सुर-सरित्-कल्लोल-लोल-ऊर्मिवत्**-ஆகாசகங்கையினுடைய் பெரிய அலைகளோடு அசைந்து வருகின்ற ப்ரவாஹம் போல; **अश्रान्तम्** - இடைவிடாது; **निर्याति** - வெளிவருகின்றது.

(பொழிப்புரை)

ஓ தாயே! சப்தப்ரபஞ்சகத்திற்கு அதிதேவதையாக இருப்பவளே! வெண்தாமரை போல வெண்மையாகவும்; மனோஹரமாயுமிருக்கின்ற சோலையோடும், அம்ருதப் பெருக்குகளால் ஸாதகர்களுடைய சிரஸை நனைக்கின்றவளும், ஸஹஸ்ராரகமலத்தில் வஸிக்கின்றவளுமான உன்னை எந்த மனிதர்கள் த்யானம் செய்கின்றனரோ; அவர்களுடைய முகத்திலிருந்து (வாக்கிலிருந்து) தோஷமற்றதும், தெளிந்ததும், சுவையுள்ளதும், வ்யக்தமாயுள்ளதுமான அக்ஷரங்கள் நிரம்பிய பதங்களோடு கூடிய கவிதாசக்தியானது, ஆகாச கங்கையினுடைய் திரண்ட அலைகளோடு கூடிய பெருகிய ப்ரவாஹம் போல் வெளியே வருகின்றது.

(விரிவுரை)

இந்த ச்லோகமானது ஸஹஸ்ராரகமலத்தில் சக்தி பீஜோபாஸனை செய்வதற்காகச் சொல்லப்பட்டதாகும். த்யானம் செய்யும்பொழுது முன் ச்லோகத்திலே கூறியுள்ள புஸ்தகம், ஜபமாலை, வராதர்பயகரங்கள் முதலியவைகளைச் சேர்த்து த்யானம் செய்ய வேண்டுவதாகும். "சிரஸில், புஸ்தகம், ஸ்படிகமாலை, வரதாபயஹஸ்தம் முதலியவை

களால் ப்ரகாசிக்கின்ற சரீரத்தோடும், சிவசக்தியின் வடிவாய்மைந்துள்ளவளும், முல்லையையும், சந்திரனையும் நிகர்த்த சோபையோடு கூடியவளுமாக ஸ்ரீதேவியை த்யானம் செய்யவேண்டும்"[1] என ஆகமும் இக்கருத்தையே ஆதரிப்பதாகும். (8)

(அவதாரிகை)

முந்திய ச்லோகங்களிலே கவிதாசக்தி முதலிய தர்ம புருஷார்த்தங்களை விரும்புகின்ற பக்தர்களுக்கு வாக்பவத்தையும், அதை உபாஸிக்க வேண்டிய விதியையும் விளக்கப்பட்டது. இந்த ச்லோகத்தில் காமபுருஷார்த்தங்களை விரும்புகின்ற பக்தர்களுக்கு காமராஜபீஜத்தின் உபாஸனையும், அதன் பலனும் சொல்லப்படுகிறது.

**ये सिन्दूरपरागपुञ्जपिहितां त्वत्तेजसा द्यामिमा-**
**मुर्वीं चापि विलीनयावकरसप्रस्तारमग्नामिव ।**
**पश्यन्ति क्षणमप्यनन्यमनसस्तेषामनङ्गज्वर-**
**क्लान्तास्त्रस्तकुरङ्गशावकदृशो वश्या भवन्ति ध्रुवम् ॥९॥**

(பதவுரை)

**हे भारति !** ஓ தாயே! **ये** - எவர்கள்; **अनन्यमनसः**- ஏகாக்ரசித்தத்துடன்; (ஒரு முகமாக நிலைநிறுத்தப்பட்ட மனதோடு) **त्वत्** - உன்னுடைய; **तेजसा** - காந்தியினால்; **इमाम्** இந்த; **द्याम्**- ஆகாசத்தை; **सिन्दूर-पराग-पुञ्ज-पिहिताम्-इव** - குங்குமப் பொடிகளுடைய ஸமூஹத்தால் மறைக்கப்பட்டது போலவும்; **उर्वीम्** - பூமியை; **विलीन-यावक-रस-**

---

1. मूर्ध्नि पुस्त कमालाभिर्वरदोज्ज्वलविग्रहाम् ।
शिवशक्त्यात्मिकां ध्यायेत्कुन्देन्दुधवलप्रभाम् ॥

**प्रस्तार-मग्नाम्-इव-च-अपि** - நனைக்கப்பட்ட செண்மஞ்சக் குழம்பினுடைய ப்ரவாஹத்தில் (அரக்கு வெள்ளத்தில்) முழுகியது போலவும்; **क्षणम्-अपि** - ஒரு க்ஷணமாவது, **पश्यन्ति** - பார்க்கின்றனரோ; (த்யானம் செய்கின்றனரோ) **तेषाम्** - அவர்களுக்கு; **त्रस्त - कुरङ्ग - शावक - दृशः** - பயத்தையடைந்த மான்குட்டிகளுடைய கண்களைப்போன்ற கண்களையுடைய பெண்கள்; **अनङ्ग - ज्वर - क्रान्ताः** - மன்மத - தாபத்தினால் - பீடிக்கப் பட்டவர்களாகக்கொண்டு; **वश्याः**- வசமானவர்களாக; **भवन्ति** - ஆகின்றனர்; **ध्रुवम्** - நிச்சயம்.

(பொழிப்புரை)

ஓ தாயே! ஆதாரபத்மத்தில் மனத்தை ஒரு முகமாக நிலைநிறுத்தி உன்னுடைய காந்தியினால் இந்த ஆகாசத்தை குங்குமப் பொடிகளுடைய வெள்ளத்தினால் முழுகியதாகவும், அவ்விதமே இந்த பூமியை செண்மஞ்சக்குழம்பினுடைய வெள்ளத்தினால் முழுகியதாகவும்; எவர்கள் ஒரு க்ஷணகாலமாவது த்யானத்ருஷ்டியோடு பார்க்கின்றனரோ; அவர்களுக்கு, மிகுந்த சஞ்சலத்தோடு கூடிய மான் குட்டிகளுடைய கண்களைப் போன்ற கண்களையுடைய ஸௌந்தரிகள் (நங்கையர்) மன்மத தாபத்தால் பீடிக்கப் பட்டு வச்யமாகின்றனர், இது நிச்சயம்.

(விரிவுரை)

இங்கே (**भारति**) - 'பாரதி' என்ற பதத்தை முன் ச்லோகத்திலிருந்து வருவித்துக் கொள்ளவேண்டும். மற்றும் இவ்விடத்தில் ஆதாரபத்மத்தில் த்யானம் செய்ய வேண்டுமென ஸ்பஷ்டமாகச் சொல்லவில்லை. என்னையோ?

அடுத்த ச்லோகத்தில் (**ये त्वां चेतसि**) 'யே த்வாம் சேதஸி' 'எவர்கள் உன்னை மனதில்' என த்யான க்ரமத்தை விதிப்பதாலும், முந்திய ச்லோகத்தில், (**मूर्ध्नि स्थिताम्**) - 'மூர்த்நி ஸ்திதாம்' 'சிரஸில் இருப்பவள்' என்று சொல்லப் பட்டதாலும், இரண்டுக்கும் நடுவேயுள்ள இந்த ச்லோகத் திலே ஆதாரபத்மத்தில் த்யானமானது சொல்லாமலே கிடைக்கின்றதெனக் கொள்ள வேண்டும்.

மற்றும், "மூலாதாரபத்மத்தில் தனுஸ், பாணம், வரதாபயமுத்ரைகளோடு காணப்படுகின்றவளும், செம் பருத்திப்புஷ்பம் போன்ற சிவந்த காந்தியை யுடையவளும், காமராஜ பீஜத்தின் வடிவாயுள்ளவளுமான ஸ்ரீதேவியை த்யானம் செய்யவேண்டும்,"[1] என ஆகமங்களில் கூறியிருப் பதும் இங்கே பொருந்தும். மேலும் இந்த ச்லோகமும், ஆநந்தலஹரியில், (**तनुच्छाया**) - 'தநுச்சாயா' என்ற பதி னெட்டாவது ச்லோகமும் ஒரே கருத்தைக் கொண்ட தென்பதும் கவனிக்கத் தக்கதாகும்.* (9)

(அவதாரிகை)

இந்த ச்லோகத்திலே, இரண்டாவது பீஜத்தினுடைய உபாஸனைபலத்தின் எஞ்சிய பகுதியையும், முதல் பீஜத்தி னுடைய அஸாதாரணமான த்யானமும், அர்த்த புருஷார்த் தங்களை விரும்புகின்றவர்களுக்கு ஸ்ரீ சக்தி பீஜத்தினுடைய த்யானமும் விளக்கப் படுகிறது.

---

1. आधाराब्जे धनुर्बाणवरदाभयलक्षिताम् ।
ध्यायेद्बन्धूककुसुमाभां कामराजस्वरूपिणीम् ॥

* என்னால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட ஆநந்த லஹரியில் மற்ற விசேஷங்களை விரிவாகக்காணலாம்.

**चञ्चत्काञ्चनकुण्डलाङ्गदधरामाबद्धकाञ्चीस्रजं**
**ये त्वां चेतसि तद्गते क्षणमपि ध्यायन्ति कृत्वा स्थिराम् ।**
**तेषां वेश्मसु विभ्रमादहरहः स्फारीभवन्त्यश्चिरं**
**माद्यत्कुञ्जरकर्णतालतरलाः स्थैर्यं भजन्ते श्रियः ॥१०॥**

(பதவுரை)

**हे तत्-गते** - *த்யாநம் செய்கின்றவர்களுடைய ஹ்ருதயத்தில் நிலைபெற்று விளங்குபவளே!* **ये** - *எவர்கள்;* **चेतसि** - *மனதில்;* **चञ्चत्-काञ्चन-कुण्डल-अङ्गद-धराम्** - *அசைகின்ற ஸ்வர்ணமயமான குண்டலங்களையும், தோள் வலயங்களையுமணிந்தவளும்;* **आ - बद्ध - काञ्ची - स्रजम्** - *அணிந்துகொள்ளப்பட்ட ஒட்டியாணத்தையும், மாலையையுமுடைய வளுமான;* **त्वाम्** - *உன்னை* **स्थिराम्** - *உறுதியாக;* **क्षणम्-अपि**-*க்ஷணகாலமாவது;* **ध्यायन्ति**-*தியாநம் செய்கின்றனரோ;* **तेषाम्** - *அவர்களுடைய;* **वेश्मसु**-*வீடுகளில்;* **श्रियः** - *ஸம்பத்துக்கள்;* **अहरहः** - *தினந்தோறும்;* **विभ्रमात्** - *பல வடிவங்களோடு;* **स्फारी-भवन्त्यः** - *வளர்ந்து கொண்டு;* **माद्यत् - कुञ्जर-कर्णताल - तरलाः** - *மதம்பிடித்த யானைகளுடைய விசிறிபோன்ற காதுகள் போல் சஞ்சலமாயிருந்த பொழுதிலும்;* **चिरम्** - *வெகுகாலம்;* **स्थैर्यम्** - *நிலைத்திருக்கும் தன்மையை;* **भजन्ते** - *அடைகின்றன.*

(பொழிப்புரை)

*ஓ தாயே! இடைவிடாது உன்னை த்யாநம் செய்கின்ற பக்தர்களுடைய ஹ்ருதயத்தில் நிலைத்து வஸிக்கின்றவளே! அநாஹதபத்மத்தில் அசைந்து கொண்டிருக்கின்ற குண்டலங்களோடும், தோள்வலயங்களோடும், ஸ்வர்ணமயமான ஒட்டியாணத்தோடும், மாலை முதலிய*

வைகளோடும் கூடிய உன்னை, எவர்கள் ஒரு க்ஷணமாவது மனதை ஒரு முகப்படுத்தி உறுதியாக தியானம் செய்கின்றனரோ; அவர்களுடைய வீடுகளில் பூமி, ஸ்வர்ணம், பசு, வாஹநம், ரத்நம் முதலிய ஸம்பத்துக்கள், மதப்பெருக்கெடுத்த யானைக் கூட்டங்களுடைய, அசைந்து கொண்டிருக்கின்ற விசிறி போன்ற காதுகள்போல எப்பொழுதும் சஞ்சலமாயிருந்த பொழுதிலும், உன்னுடைய அநுக்ரஹத்தினால் நிலையாயிருந்து கொண்டு தினந்தோறும் வளர்கின்றன.

(விரிவுரை)

இந்த ச்லோகமானது ஹ்ருதய கமலத்தில் வாக்பவ பீஜோபாஸனைக்காகச் சொல்லப் பட்டதாகும். "ஹ்ருதய கமலத்தில் ஸ்வர்ணத்தை யொத்த காந்தியோடும், பாசம், அங்குசம் இவைகளால் ப்ரகாசிக்கின்றவளும், வரதாபய ஹஸ்தங்களோடும், வாக்பவஸ்தானத்தின் வடிவாகவுமுள்ள, ஸ்ரீதேவியை த்யாநம் செய்யவேண்டும்"[1] என ஆகமம் கூறும். (10)

(அவதாரிகை)

இவ்விதம் முன்பு தர்மங்களையும், பொருள்களையும், போகங்களையும் விரும்பும் பக்தர்களுக்கு த்யாநம் செய்ய வேண்டியக்ரமங்களையும், அந்த த்யானங்களுக்குரிய மூர்த்தி பேதங்களையும், அந்த மூர்த்திகளுடைய உபாஸனையாலேற்படும் பலன்களையும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. இப்பொழுது இந்த ச்லோகத்திலே மோக்ஷத்தை-பேரின்

---

1. हृत्पद्मे काञ्चनप्रख्यां पाशाङ्कुशसमुज्ज्वलाम् ।
वरदाभयहस्तां च ध्यायेद्वाग्भवरूपिणीम् ॥

பத்தைப்பெற-விரும்புகின்ற பக்தர்களுக்கு த்யாநக்ரமும், த்யாநத்திற்குகந்த மூர்த்தியின் வடிவத்தைபும், அதனு லேற்படும் பலத்தையும் சொல்லப்படுகிறது.

आभट्या शशिखण्डमण्डितजटाजूटां नृमुण्डस्रजं
बन्धूकप्रसवारुणाम्बरधरां प्रेतासनाध्यासिनीम् ।
त्वां ध्यायन्ति चतुर्भुजां त्रिनयनामापीनतुङ्गस्तनीं
मध्ये निम्नवलित्रयाङ्किततनुं त्वद्रूपसंवित्तये ॥११॥

(பதவுரை)

हे भारति- ஓ தாயே! **त्वद्-रूप-सं-वित्तये** உன்னுடைய ஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தின் பொருட்டு; **आभट्या** - ஆர்படீ என்ற ஆஸந விசேஷத்தோடு; **प्रेत-आसन-अध्यासिनीम्**-பரம சிவனுடைய வாம (இடது) பாகத்திலிருப்பவளும்; **शशि-खण्ड-मण्डित-जटा-जूटाम्** - சந்த்ரகலையினுல் அலங்கரிக்கப்பட்ட ஜடாஜூடத்தோடு கூடியவளும்; **नृ-मुण्ड-स्रजम्**-மண்டை ஓடுகளாலாகிய மாலையை யணிந்தவளும்; **बन्धूक-प्रसव- अरुण - अम्बर - धराम्** - செம்பருத்திப் புஷ்பம் போன்ற சிவந்த வஸ்த்ரத்தைத் தரித்தவளும்; **चतुर्भुजाम्**; நான்கு கைகளையுடையவளும்; **त्रिनयनाम्**-மூன்று கண்களை யுடையவளும்; **आ-पीन-तुङ्ग-स्तनीम्** - சுற்றும் பருத்துயர்ந்த கொங்கைகளை யுடையவளும்; **मध्ये** - நடுவில்; **निम्न-वलि-त्रय-अङ्कित-तनुम्** - வளைந்த மூன்றுமடிப்புக்களினுல் அடையாளம் செய்யப்பட்ட சரீரத்தை யுடையவளுமான; **त्वाम्**- உன்னை; **ध्यायन्ति**-த்யானம் செய்கின்றனர்.

(பொழிப்புரை)

ஓ தாயே, மோக்ஷத்தை விரும்புகின்ற பக்தர்கள் - உன்னுடைய ஸ்வரூபத்தைக் காண விரும்பி, ஆர்படீ

என்ற ஆஸந விசேஷத்தோடு ஸ்ரீபரமசிவனுடைய இடது புறத்திலிருப்பவளும், சந்த்ரகலையைத் தலையில் தரித்தவளும், மண்டையோடுகளை மாலையாயணிந்தவளும்; செம்பருத்திப் புஷ்பமெனச் சிவந்த வஸ்த்ரத்தை யணிந்தவளும்; நான்கு கைகளோடும், மூன்று கண்களோடும், நாற்புறமும் உன்கு பருத்துயர்ந்த கொங்கைகளோடும், நடுவே மூன்று மடிப்புக்களால் அடையாளம் செய்யப்பட்ட சரீரத்தோடு கூடியவளாகவும் உன்னை த்யானம் செய்கின்றனர்.

(விரிவுரை)

**आर्भटी**-(ஆர்படீ) என்பது ஒரு ஆஸந விசேஷமாகும். அந்த ஆஸநத்தினுடைய லக்ஷணம் வருமாறு "**ऊरुद्वयं निधायोर्वोः स्थितिरार्भटिकासनम्**" "இடது தொடையின் மேல் வலது தொடையையும், வலது தொடையின் மேல் இடது தொடையையும், சேர்த்து உயர்த்தி உட்காருவது ஆர்படீ என்ற ஆஸநபேதமாகும். மற்றும்," "**समं कायशिरोग्रीवं धारयन्नचलं शिरः**" "சரீரம், சிரஸ், கழுத்து இவைகளை அசையாமல் ஸமமாகச் செய்யவேண்டும்" எனவும் கூறியிருப்பது போல அவயவங்களை வளையாமல் நேராகச் செய்து த்யாநம் செய்ய வேண்டும். இந்த ஆர்படீ என்ற ஆஸநம் மிகவும் பெருமை வாய்ந்ததாகும்.

இவ்விடத்தில், **प्र-इत-आसन-अध्यासिनीम्-(प्रेतः)** ப்ரேத; என்ற பதத்தில் **प्र+इतः-प्रेतः** "எப்பொழுதும் பரமசிவனுடன் சேர்ந்திருப்பவள்" எனச் சிவபரமாகப் பொருள் கொள்ளவேண்டும். இப் பதத்திற்கு ஸ்ரீஸோமதிலகர் என்ற உரை ஆசிரியர், **शिवारूढाम्**-சிவாரூடாம்-"சிவனோடு சேர்ந்தவள்" என்று உரையும் செய்திருக்கிறார்.

**नृ-मुण्ड-स्रजम्**-ந்ருமுண்டஸ்ரஜம்-என்ற இப்பதத்திற்கு ஸாதாரணமாக மண்டையோடுகளான மாலை எனப் பொருளாகும். எனினும் உண்மைப் பொருள் அதுவன்று. இப்பதத்திற்கு முல்லைமாலைகளென்றோ, மண்டையோடு போல் பெருத்தும் வர்த்துலமாகவும், வெண்மையாகவுமிருக்கின்ற முத்துக்களுடைய மாலை யென்றோ, செண்பக மாலையென்றோ பொருள் கொள்ள வேண்டும். இவ்விதமே ஸ்ரீராகவானந்தர் உரை செய்திருக்கிறார். இதற்கு மற்ற விசேஷமான பொருள்களை அங்கே காணலாம். ஆனால் ஸ்ரீஸோமதிலகர் "கபால மாலையை யணிந்தவள்" என்று தான் பொருள் கொள்ளுகிறார். ஸ்ரீஸிம்ஹராஜரோ விசேஷமாகப் பொருளொன்றும் கூறாது இந்த ச்லோகத்திலே ஸ்ரீதேவியின் ப்ரௌடாவஸ்தை (நடுவயது) வர்ணிக்கப் படுகின்றது, வேறு விசேஷம் ஒன்றுமில்லை எனஎழுதுகிறார்.

மேலும், இந்த ச்லோகம் இரண்டாவது பீஜத்தினுடைய ககாரலகாரங்களைத் தள்ளி எஞ்சிய காமகலையான ஈம்காரத்தின் வடிவாகிய ஸ்ரீதேவியினுடைய த்யான ரூபத்தையும் சொல்லுவதாகும்.

**चतुर्भुजाम्**-சதுர்புஜாம்-என்ற பதத்திற்கு நான்கு கைகளிலும் பாசம், அங்குசம், கரும்பு, புஷ்பபாணம் இவைகளைத் தரித்தவள் என்று பொருள்.

"கரும்புவில், புஷ்பபாணம், பாசம், அங்குசம், இவைகளினால் பிரகாசிக்கின்ற கைகளையுடையவளும், பரமசிவனுடைய மடியில் வஸிப்பவளும், காமகலையின் வடிவாயமைந்தவளுமான ஸ்ரீதேவியை த்யானம் செய்ய

வேண்டும்"[1]. என்பதும் சைவாகம ரஹஸ்யமாகும். உண்மையில் த்ரிபுரைக்கும், த்ரிபுரஸுந்தரிக்கும் பேதம் கிடையாது. ஆகவே இந்த ச்லோகமானது முக்யமாயிருப்பதோடு மல்லாமல் ஸ்ரீத்ரிபுரஸுந்தரியின் த்யான வடிவாயுள்ளது என்பதும் அறியத்தக்கது. (11)

(அவதாரிகை)

எவர்கள் "உன்னை மனதாலும் நினைப்பதில்லையோ அவர்களுக்கு கவிதாசக்தியானது எவ்விதமுண்டாகும்" என்றும், ஸ்ரீதேவியை உபாஸிக்காதவர்களுக்கு ஸர்வஜ்ஞத்வம் கிடைப்பதும் துர்லபமென்று முன்பு சொல்லப்பட்டது. இப்பொழுது ஸ்ரீதேவியை உபாஸிப்பவர்களுக்கு அந்த ஸர்வஜ்ஞத்வமும் கிடைப்பது ஸுலபமென்பதை இந்த ச்லோகத்தினால் உபதேசிக்கப்படுகிறது.

**जातोऽप्यल्पपरिच्छदे क्षितिभुजां सामान्यमात्रे कुले**
**निःशेषावनिचक्रवर्तिपदवीं लब्ध्वा प्रतापोन्नतः ।**
**यद्विद्याधरवृन्दवन्दितपदः श्रीवत्सराजोऽभव-**
**द्देवि त्वच्चरणाम्बुजप्रणतिजः सोऽयं प्रभावोदयः ॥१२॥**

(பதவுரை)

**हे देवि**-ஒளியின் வடிவே! ஓ தாயே! **श्रीवत्सराजः** - ஸ்ரீவத்ஸராஜன் என்னும் அரசன்; **अल्प-परिच्छदे** - அல்பமான உபகரணங்களோடு கூடிய; **सामान्यमात्रे**-கேவலம் மண்டலாதிபதி என்ற அளவிலே; **क्षिति-भुजाम्** - சிற்றரசர்களுடைய; **कुले** - வம்சத்தில் - **जातः** - **अपि** - பிறந்தாலும் **प्रताप-उन्नतः** - பராக்ரமத்தால் உயர்ந்த நிலையையடைந்து;

---

1. इक्षुचापप्रसूनेषु पाशाङ्कुशलसद्भुजाम् ।
ध्यायेत्कामकलां देवीं कामेशाङ्कनिवासिनीम् ॥

**निः - शेष-अवनि-चक्रवर्ति-पदवीम्** - ஸகல ஸார்வபௌமர்களுடைய பதவியை; **लब्ध्वा** - அடைந்து; **विद्या-धर-वृन्द-वन्दित-पदः** - வித்யாதரஸமூஹங்களால் வணங்கப்பட்ட பாதங்களையுடையவனாக; **अभवत्** - இருந்தான்; **इति** - என்பது; **यत्** - யாதொன்று உண்டோ; **सः** - அப்புகழ்வாய்ந்த **अयम्** - இந்த (பெருமையும்) **त्वत् - चरण-अम्बुज-प्रणतिजः** - உன்னுடைய சரணகமலங்களை ஸேவித்தகாரணத்தினாலுண்டாகிய; **प्रसाद-उदयः** - அநுக்ரஹத்தினுடைய உதயமன்றோ!

(பொழிப்புரை)

ஒளியுடன் திகழும் ஓ தாயே! ஶ்ரீவத்ஸராஜன் என்ற அரசன் ஸாதாரண அரசகுடும்பத்தில் பிறந்தும், தன்னுடைய பராக்ரமத்தினால் ஸார்வபௌமர்களாகிய சக்ரவர்த்திகளை வென்று, நான்கு ஸமுத்ரமும் சூழ்ந்த இத்தரணியை ஏகசக்ராதிபதியாயிருந்து கொண்டு, வேத வேதாங்கங்களை முற்றும் கற்றுணர்ந்த முனிகளாலும், ஞானிகளாலும், தேவர்களாலும், வித்யாதரர்களாலும் ஸேவிக்கத்தக்க மஹிமையையடைந்ததும் உன்னுடைய திருவடித்தாமரையை அவன் இடைவிடாது ஸேவித்த காரணத்தினாலன்றோ!

(விரிவுரை)

ஶ்ரீவத்ஸராஜன் என்ற இந்த அரசன் கௌசாம்பீ யென்னும் நகரத்திலே ஒரு சிற்றரசனாக இருந்த உதயனன் என்பவன். இந்த உதயனனையே வத்ஸராஜன் எனக் கூறுவதுமுண்டு.

"प्राप्यावन्तीनुदयनकथाकोविदग्रामवृद्धान्" "உதயனன் என்ற அரசனுடைய கதையைப் புகழ்வதில் திறமை வாய்ந்த வ்ருத்தர்கள் நிறைந்த அவந்தி தேசத்தை யடைந்து" என்றும்; "प्रद्योतस्य प्रिय-दुहितरं वत्सराजोऽथ जह्रे" ப்ரத்யோதன் என்ற அரசனுடைய மகளை வத்ஸராஜன் என்ற அரசன் அபஹரித்தான்" எனவும் கவிகுலதிலகன் ஸ்ரீகாளிதாஸனும்; "लोके हारि च वत्सराजचरितम्"-"உலகத்தில் ஸ்ரீவத்ஸராஜனுடைய சரிதம் மக்களுடைய மனதைக் கவர்வதாகும்" என ஸ்ரீஹர்ஷகவியும் வர்ணித்திருக்கின்றனர்.

கேவலம் ஒரு சிற்றரசனை ஸ்ரீவத்ஸராஜன், யௌகந்தராயணன், ருமண்வான் -முதலிய மந்த்ரீ ஸேநாதிபதி இவர்களுடைய உதவியினால் ஒரு பெரிய சக்ரவர்த்தி பதவியை யடைந்தான் என கதாஸரித்ஸாகரம் கூறும். ஸ்ரீவத்ஸராஜனுடைய மற்றுமுள்ள விசேஷங்களை ரத்நாவலீ, ஸ்வப்நவாஸவதத்தம் முதலிய நாடகங்களில் விரிவாகக் காணலாம். இவ்விடத்தில் ஸ்ரீலகுபட்டாரகர் ஸ்ரீ தேவியை உபாஸனை செய்து ஸ்ரீவத்ஸராஜன் மிகுந்த பெருமையை யடைந்தான் என்று வர்ணிப்பதிலிருந்து அந்த அரசன் தன் முயற்சியும், சிறந்த கல்வியறிவும்; ஸ்ரீதேவீயுபாஸகனாகவும் இருந்து கொண்டு சக்ரவர்த்திகளாலும், கவிகளாலும், முனிவர்களாலும், தேவர்களாலும், வணங்கத்தக்க குணாதிசயங்களைப் பெற்று விளங்கியவனெனத் தெரியவருகிறது. (12)

(அவதாரிகை)

ஓ தாயே; "உன்னை எவர்கள் மனதாலும் நினைத்து த்யானம் செய்யவில்லையோ அவர்களுக்கு கவிதாசக்தி

யானது எவ்விதமுண்டாகும்" என்று முன்பு கூறியதையே மறுபடியும் வற்புறுத்தி, அதை விரிவாகச் சொல்ல நினைத்து, அவ்விதம் த்யாநம் செய்யாவிடில், அதனால் ஏற்படுகின்ற தோஷங்களையும் இந்த ச்லோகத்திலே வர்ணிக்கப் படுகிறது.

**चण्डि त्वच्चरणाम्बुजार्चनकृते बिल्वीदलोल्लुण्ठन-**
**त्रुट्यत्कण्टककोटिभिः परिचयं येषां न जग्मुः कराः ।**
**ते दण्डाङ्कुशचक्रचापकुलिशश्रीवत्समत्स्याङ्कितै-**
**र्जायन्ते पृथिवीभुजः कथमिवाम्भोजप्रभैः पाणिभिः ॥१३॥**

(பதவுரை)

**हे चण्डि**-மிகுந்த கோபமுள்ளவளே! ஓ தாயே! **येषाम्**-எவர்களுடைய; **कराः** - கைகள்; **त्वत्-चरण-अम्बुज-अर्चन-कृते** - உன்னுடைய - சரண கமலங்களை - அர்ச்சனை- செய்வதில்; **बिल्वी-दल-उलुण्ठन-त्रुट्यत्-कण्टक-कोटिभिः** - பில்வ தளங்களைக் கொய்யும் பொழுது (அதன்) முள்ளுகளுடைய நுனிகளோடு; **परिचयम्** - பழக்கத்தை; **न - जग्मुः** - அடையவில்லையோ; **ते** - அவர்கள்; **दण्ड-अङ्कुश-चक्र-चाप-कुलिश-श्रीवत्स-मत्स्य-अङ्कितैः** - தண்டம், அங்குசம், சக்ரம், தனுஸ், வஜ்ராயுதம், ஸ்ரீ வத்ஸம், மத்ஸ்யம் முதலிய ரேகைகளால் அடையாளம் செய்யப்பட்டதும்; **अम्भोज-प्रभैः** - தாமரைப் புஷ்பங்களுடைய சிவந்த காந்தியோன்ற காந்தியோடு கூடியதுகளுமான; **पाणिभिः** - கைகளோடு (கூடிய) **पृथिवी-भुजः** - அரசர்களாக; **कथम्-इव** - எவ்விதம்; **जायन्ते**- உண்டாகமுடியும். ஒருக்காலும் உண்டாகமுடியாது.

(பொழிப்புரை)

மிகுந்த கோபமுள்ளவளே! ஓ தாயே! எவர்களுடைய கைகள், உன்னுடைய சரண கமலங்களைப் பூஜை செய்வதற்கு பில்வதளங்களைக் கொய்யும் பொழுது அதனுடைய முட்களால் கீறப்பட்ட வடுக்களோடு கூட பழக்கத்தை யடைய வில்லையோ, அவர்கள் தண்டம், அங்குசம், சக்ரம், தனுஸ், வஜ்ரம், ஸ்ரீவத்ஸம், மத்ஸ்யம் முதலிய ரேகைகளால் அடையாளம் செய்யப்பட்டு, தாமரைப் புஷ்பம் போலச் சிவந்து மிருதுவாயிருக்கின்ற கைகளோடு காணப்படுகின்ற உத்தம ராஜலக்ஷணம் பொருந்திய சக்ரவர்த்திகளாக எவ்விதம் பிறக்கமுடியும்? உனது சரண கமலங்களை இடைவிடாது எப்பொழுதும் பில்வம் முதலிய புஷ்பங்களைக் கொண்டு அர்ச்சனை செய்வதன் பயனாகவே உலகில் சக்ரவர்த்தியாகப் பிறக்க முடியுமென்பதும் தாத்பர்யம்.

(விரிவுரை)

மேலே கூறிய தண்டம், அங்குசம், சக்ரம் முதலிய ரேகைகள் ஸாமுத்ரிகலக்ஷணங்களை யநுஸரித்து சக்ரவர்த்தியாயிருக்கும் தன்மையை ஸூசனை செய்வதாகும். "**पत्रेषु विल्वपत्रं स्यान्नान्यत्पत्रं विशिष्यते**" "பத்ரங்களில் பில்வ பத்ரம் சிறந்தது, மற்றவைகள் அவ்வளவு விசேஷமன்று" என ஆகமங்கள் கூறுவதால், ஸ்ரீதேவியை அர்ச்சனை செய்வதற்கு பில்வம் மிகச் சிறப்புள்ளதென கூறப்பட்டது. மற்றும், "**वामे पुस्तकधारिणीम्**" என்று ஏழாவது ச்லோகத்திலே சொல்லப்பட்ட கவிதாசக்தியினாலுண்டாகும் ஸர்வஜ்ஞத்வமும், இந்த ச்லோகத்திலே சொல்லியிருக்கின்ற சக்ரவர்த்திலக்ஷணத்திற்கு உபலக்ஷணமெனக்

கொள்ள வேண்டும். அதே போல இந்த ச்லோகத்திலே கூறப்பட்ட சிறந்த சக்ரவர்த்தி லக்ஷணமும், அந்த ஏழாவது ச்லோகத்தில் கூறப்பட்ட ஸர்வஜ்ஞத்வலக்ஷணத்திற்கு உபலக்ஷணமாகக் கொள்ளவேண்டும்.

தவிர, "यत्पादपद्मं समुपासकानां भोगापवर्गौ तु नृणां करस्थौ" "எந்த தேவியினுடைய சரணகமலத்தை நன்றாக உபாஸிக்கின்ற மனிதர்களுக்கு, போகமும், (இவ்வுலக ஸம்பந்தமான பலன்கள்) அபவர்க்கமும், (மறு உலக ஸம்பந்தமான பலன்கள்) அவர்களுடைய கைகளிலிருக்கின்றனவோ" எனச் சிறப்பித்துக் கூறியிருப்பது போல, இங்கே ஸ்ரீமஹாதேவியினுடைய பாதகமலங்களை அர்ச்சனை செய்வது அவச்யமென வற்புறுத்துவதாகும். அர்ச்சனையின் வாயிலாக ஸமஸ்த ஸித்திகளும் கைகூடுமென்பதும் ஆகமங்களின் தாத்பர்யமாகும். "न पूजावर्जितं सौख्यम्" "ஸௌக்யமென்பது பூஜா - அர்ச்சனை - வழி வாயில்லாது கிடைக்காது" என்பதும் ஆகமங்களுடைய கொள்கையாகும். 'சண்டீ' என்று அழைப்பதன் தாத்பர்யமானது, ஸ்ரீ தேவியை ஸுலபமாக ஆராதிப்பது முடியாது என்பதையும் ஸூசனை செய்வதாகும். (13)

(அவதாரிகை)

முன் ச்லோகத்தில் 'உன்னுடைய சரணாரவிந்தங்களை அர்ச்சனை செய்துதான் இவ்வுலக ஸுகத்தையும், மறு உலக ஸுகமான மோக்ஷத்தையும் அடைய முடியும்" என்று கூறப்பட்டது. அவ்விதம் அர்ச்சனை செய்வதற்குரிய

அதிகாரிகளையும், அந்த அர்ச்சனைக்கு வேண்டிய உபகரணங் (ஸாதனங்கள்) களையும், அதனாலேற்படும் பலன்களையும், அப்பலன்கள் எப்பொழுது கிடைக்கு மென்பதையும், உபாஸிக்க வேண்டிய ஸ்ரீதேவியின் வடிவத்தையும், உபாஸனா விதிகளையும் இங்கே விளக்கப்படுகிறது.

विप्राः क्षोणिभुजो विशस्तदितरे क्षीराज्यमध्वासवै-
स्त्वां देवि त्रिपुरे परापरमयीं संतर्प्य पूजाविधौ ।
यां यां प्रार्थयते मनः स्थिरतया तेषां त एते ध्रुवं
तां तां सिद्धिमवाप्नुवन्ति तरसा विघ्नैरविघ्नीकृताः ॥१४॥

(பதவுரை)

हे त्रिपुरे - முப்புரத்தையும் இருப்பிடமாகக் கொண்டவளே! हे देवि ! ஒளிமிகுந்தவளே! ஓ தாயே! विप्राः - அந்தணர்கள்; क्षोणि-भुजः க்ஷத்ரியர்கள்; विशः - வைச்யர்கள்; तत्-इतरे - இந்த மூன்று வர்ணத்தைக் காட்டிலும் வேறுபட்டவர்களான சூத்ரர்கள்; क्षीर-आज्य-मधु-आसवैः- பால் - நெய் - தேன் - மத்யம் இவைகளால்; परापरमयीम्- ஸகல நிஷ்கலவடிவாயிருக்கிற; त्वाम्-உன்னை; पूजा-विधौ- பூஜை செய்வதில்; - सं-तर्प्य- ஸந்தோஷிக்கும்படி செய்து; यां - याम्-எந்த எந்த; सिद्धिम्-ஸித்தியை; तेषाम्-அவர்களுடைய; मनः-மனமானது; स्थिरतया- உறுதியோடு கூட; प्रार्थयते-விரும்புகின்றதோ; ते-एते-அந்த பக்தர்களும்; विघ्नैः-தடைகளினால்; (தொடரப்படினும்) अविघ्नी-कृताः- விலக்கப்பட்டவர்களாகக் கொண்டு; तां - ताम्-அந்த அந்த (ஸித்தியை) अव - आप्नुवन्ति-அடைகின்றனர்; ध्रुवम् - நிச்சயம்.

(பொழிப்புரை)

முப்புரத்தையும் இருப்பிடமாகக் கொண்டவளே-ஒளியின் வடிவே! ஓ தாயே! ப்ராஹ்ம-க்ஷத்ரிய-வைச்ய - சூத்ரர்களென்ற நான்கு வர்ணத்தவர்களும்; முறையே பால், நெய், தேன், மத்யம் என்ற திரவியங்களைக் கொண்டு ஸகல வடிவாகவும், நிஷ்கல வடிவாகவுமுள்ள உன்னைப் பூஜை செய்து திருப்தி செய்வித்தால், அவர்களுடைய மன மானது உறுதியோடு கூட எந்த எந்த ஸித்திகளை விரும்பு கின்றதோ, அந்த அந்த ஸித்திகளையும், பலவித இடையூறு களால் தொடரப்பட்டாலும் அந்த பக்தர்கள் உனது அரு ளின் பெருமையால் இடையூறுகள் விலக்கப்பட்டு, இப் பிறவியிலேயே அவர்கள் விரும்பிய பலன்களையும் அடை கின்றனர் என்பது உறுதியன்றோ.

(விரிவுரை)

இவ்விடத்தில், **तदितरे**-ததிதரே - 'மூன்று வர்ணத்த வரைக் காட்டிலும் வேறு பட்டவர்களான சூத்ரர்கள்' என்றதால் ஸ்ரீமஹாதேவியை பூஜை செய்வதற்கு பக்தி யுள்ள எவரும் தகுதியுள்ளவர்கள் என்பதைக் குறிப்ப தாகும். **परापर-मयीम्**-பராபரமயீம்-என்ற பதத்தால் ஸ்ரீ தேவியை ஸகுணமாகவோ, நிர்குணமாகவோ, உபாஸனை செய்யலாமென்றும்; "**सगुणा रागिभिः सेव्या निर्गुणा तु विरागिभिः**" "ஸகுணவடிவை பலத்தில் விருப்பமுள்ளவர்களும், நிர்குணவடிவை விரக்தர்களும் தன்னுடன் அபேதவடிவாக, கர்மத்திலே அகர்மத்தைக் கண்டு கொண்டு; "**यतस्तृतीयो विदुषां तुरीया तत्परं महः**" "எந்த வஸ்துவானது அறிஞர் களுக்கு மூன்றாவதாக உள்ளதோ, அந்த வஸ்துவானது

துரீய வடிவாய் நிற்கும் சிறப்பு வாய்ந்த ஒளியேயாகும்." என்பது போல உறுதியோடு கூட தர்ப்பணாதிகளைச் செய்கின்ற காரணத்தினுலும்; "**निस्त्रैगुण्ये पथि विचरतां को विधिः को निषेधः**" "முக்குணங்களுக்குமப்பாலுள்ள வழியில் ஸஞ்சரிக்கின்றவர்களுக்கு விதியேது நிஷேதமேது?" என்பது போலவும்; அவர்களுக்கு பாபமோ, புண்யமோ, பந்தமோ, மோக்ஷமோ ஒன்றும் கிடையாது என்று கூறியிருப்பதும் இங்கு அறியத்தக்கது.

**सं-तर्प्य-पूजा-विधौ** - ஸம்-தர்ப்ய-பூஜா-விதௌ - பூஜாவிதிகளில் நன்கு ஸந்தோஷிக்கும்படி செய்து, என்றதால் விதிப்பிரகாரமுள்ள ஸ்ரீ பரதேவதையினுடைய பூஜாஸமயத்தைத் தவிர மற்ற ஸமயங்களில் பிந்து தர்ப்பணாதிகளைச் செய்வது கூடாது என்பதைத் தெரிவிப்பதாகும். **मनः- स्थिरतया**-மனஸ்திரதயா- "மனமானது உறுதியோடு" என்றதால் சித்தத்தின் உறுதியின் பொருட்டு ஆஸநத்தை ஸ்வீகரிக்க வேண்டியதை ஸூசனை செய்வதாகும். **ध्रुवम्**-த்ருவம் - "நிச்சயம்" என்றதால் ஸ்ரீதேவியின் திருவடியை ஸேவிக்கின்ற பக்தர்களுக்குள்ள ஸ்வாநுபவத்தை உறுதி செய்வதாகும். **तरसा**-தரஸா-"விரைவில்" என்றதால் இப்பிறவியிலேயே ஸகல ஸித்திகளையுமடையக்கூடுமென்பதைத் தெரிவிப்பதாகும். **विघ्नैः - अविघ्नी - कृताः** - விக்னைரவிக்னீக்ருதா:—"இடையூறுகளோடு கூடியிருந்தாலும், அவைகளை விலகச்செய்து" என்றதால் பலமான ப்ராரப்த கர்மங்கள் முதலிய பிரதிபந்தங்கள் உண்டானாலும் அவைகளையெல்லாம் நாசமடையச்செய்து அநுக்ரஹம் செய்கின்றவள் என்பதும் கிடைப்பதாகும்.

மற்றும், இந்த ச்லோகத்திலே கூறியுள்ள ரஹஸ்யார்த்தமாயிருக்கின்ற பராபரஸகலநிஷ்கலவடிவாகிய ஸ்ரீதேவியினுடைய உபாஸனைகளும்; பூஜாக்ரமங்களும், அவைகளுக்குரிய திரவியங்களும், அதிகாரிகளும், அங்கந்யாஸங்களும், பலன்களும், ஸ்ரீஸிம்ஹராஜர், ஸ்ரீஸோமதிலகர், ஸ்ரீராகவாநந்தர் முதலியவர்களுடைய உரைகளில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. அவைகளை அங்கே விரிவாகக் காணலாம்.

உரையாசிரியர்களுடைய அபிப்பிராயமனைத்தும் இங்கு விளக்கப் போதிய சக்தியும் எனக்குக் கிடையாது. புத்தகமும் பெருகிவிடும். மேலும் அந்த ரஹஸ்யார்த்தங்களை ஸ்ரீகுருவினுடைய உபதேசத்தோடு தீக்ஷாஸ்வீகாரம் செய்துகொண்டு, அக்குருக்களுடைய ஸம்பிரதாய க்ரமமாக வந்துள்ள வழியைப் பின் பற்றுகின்றவர்களிடமே தெரிந்து கொள்ள வேண்டிய விஷயமாதலால் இந்த ச்லோகத்திற்கு உரை எழுதுவதை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன். (14)

(அவதாரிகை)

முன் ச்லோகத்திலே "**परापरमयीम्** - பராபரமயீம்" என்று ஸ்ரீ தேவியினுடைய விசேஷத்தைச் சொல்லப்பட்டது. இப்பொழுது, அந்த ச்லோகத்திலே கூறப்பட்ட தேவியினுடைய பராவடிவம் யாது? அபரா வடிவம் யாது என்பதை அறிய விரும்பும் பக்தர்களுக்கு முன்னதான பராவடிவம் இங்கு விளக்கப்படுகிறது.

शब्दानां जननी त्वमत्र भुवने वाग्वादिनीत्युच्यसे
त्वत्तः केशवासवप्रभृतयोऽप्याविर्भवन्ति ध्रुवम् ।
लीयन्ते खलु यत्र कल्पविरमे ब्रह्मादयस्तेऽप्यमी
सा त्वं काचिदचिन्त्यरूपमहिमा शक्तिः परा गीयसे ॥१५॥

(பதவுரை)

**हे वाग्वादिनि** ! *வாகிந்த்ரியத்தை ப்ரேரணை செய்கின்றவளே! ஓ தாயே!* **त्वम्**-*நீ;* **अत्र**-*இந்த;* **भुवने**- *(சப்தார்த்த வடிவான) பிரபஞ்சத்தில்;* **शब्दानाम्** *(பராமுதலிய) சப்தங்களுக்கு;* **जननी**-*தாய்;* **इति**-*என்று;* **उज्यसे**- *(அறிஞர்களால்); சொல்லப்படுகிறாய்;* **केशव-वासव-प्रभृतयः**- *விஷ்ணு, இந்த்ரன் முதலியவர்கள்;* **त्वत्तः**-*உன்னிடமிருந்து;* **आविर्भवन्ति**- *உண்டாகின்றனர்,* **ध्रुवम्**-*நிச்சயம்.* **अमी**- *இந்த;* **ब्रह्म-आदयः**-*ப்ராஹ்மன் முதலியவர்களும்;* **ते, अपि**-*அந்த விஷ்ணு முதலியவர்களும்;* **कल्प-विरमे**- *பிரளயத்தின் முடிவில்;* **यत्र** - *எவ்விடத்தில்;* **लीयन्ते, खलु**- *லயத்தை (ஒடுக்கம்) அடையகின்றனரோ!* **सा** - *(அப் பெருமையைப் பெற்ற;* **त्वम्**-*நீ;* **काचित्**-*அநிர்வசநீயமான; (வார்த்தைகளால் நிர்ணயம் செய்ய முடியாத)* **अचिन्त्य-महिमा**- *சிந்தனைக்கும் எட்டாத பெருமையையுடைய;* **परा**- *பராவடிவான;* **शक्तिः**- *சக்தி என்று;* **गीयसे**- *துதிக்கப்படுகிறாய்.*

(பொழிப்புரை)

*வாக்கு என்னும் இந்திரியத்தை (வார்த்தைகளை இயங்கச் செய்வது) பிரேரணை செய்கின்ற ஓ தாயே! ஸரஸ்வதி, ஒலியின் வடிவாகவும், பொருளின் வடிவாகவும்,*

தோற்றமளிக்கும் இப்பிரபஞ்சத்தில்; பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்ற நான்கு விதமான வடிவங்களோடு ஐம்பது அக்ஷரங்களிலும் பரவி, ஸமஸ்த வேதங்களுடைய லக்ஷணங்களாயிருக்கின்ற சப்தராசிகளோடு ஒன்றியிருக்கின்ற நீ, சப்தங்களுக்குத் தாயே போன்றவள், என அறிஞர்களால் புகழப்படுகின்றாய். தவிர, பிரபஞ்சத்தை நிர்மாணம் செய்கின்ற ப்ரஹ்மா, விஷ்ணு முதலிய தேவர்களும், தேவாஸுர மனுஷ்யர்களும் கல்பகாலத்தின் துவக்கத்திலே உன்னிடமிருந்தே உண்டாகின்றனர். அவ்விதமே கல்பத்தின் முடிவிலும் உன்னிடமே லயத்தை அடைகின்றனர். இவ்வளவு சிறப்பு வாய்ந்த உன்னை, வாக்கினால் நிர்ணயம் செய்யமுடியாது, சிந்தனைக்கும் எட்டாத ஒரு மஹாசக்தி என வேதங்களும், உபநிஷதங்களும், ஆகமங்களும் போற்றுகின்றனவன்றோ.

(விரிவுரை)

இந்த ச்லோகத்திலுள்ள சப்த தத்துவங்களுடைய விசேஷங்களை ஸ்ரீராகவாநந்தர் ஸ்ரீஸோமதிலகர் முதலியவர்களியற்றிய வியாக்யானங்களில் விரிவாகக் காணலாம். (15)

(அவதாரிகை)

இவ்விதம் முன் ச்லோகத்திலே ஸ்ரீதேவியினுடைய ப்ரபஞ்சாதீதமான பராஸ்வரூபத்தைச் சொல்லி, த்யாநம் செய்வதற்குத் தகுந்த மற்றொரு ஸ்வரூபமாகிய அபரா என்பதை இங்கு விளக்கப்படுகிறது.

देवानां त्रितयं त्रयी हुतभुजां शक्तित्रयं त्रिस्वराः
त्रैलोक्यं त्रिपदी त्रिपुष्करमथो त्रिब्रह्म वर्णास्त्रयः ।
यत्किंचिज्जगति त्रिधा नियमितं वस्तु त्रिवर्गात्मकं
तत्सर्वं त्रिपुरेति नाम भगवत्यन्वेति ते तत्त्वतः ॥१६॥

(பதவுரை)

**हे भगवति** - ஓ பகவதி, தாயே! **देवनाम्** - தேவர்களுடைய; **त्रितयम्** - மூன்றும்; (ப்ரஹ்மா, விஷ்ணு, மஹேச்வரன்) **हुतभुजाम्** - அக்நிகளுடைய, **त्रयी** - மூன்றும்; (கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்நி) **शक्तित्रयम्** - சக்திகளுடைய மூன்றும்; (இச்சாசக்தி, ஞாநசக்தி, கிரியாசக்தி) **त्रिस्वराः** - மூன்று ஸ்வரங்களும்; (உதாத்தம்-அநுதாத்தம், ஸ்வரிதம்) **त्रैलोक्यम्**-மூன்று உலகங்களும்; (பூமி, ஸ்வர்கம், பாதாளம்) **त्रिपदी** - மூன்று பாதங்களாலான காயத்ரியும்; **त्रिपुष्करम्**- மூன்று தீர்த்தங்களும்; (கங்கை, யமுனை, ஸரஸ்வதீ) **त्रिब्रह्म**-மூன்று வேதங்களும்; (ரிக், யஜுஸ், ஸாம) **त्रयः**- மூன்று அக்ஷரங்களும்; (ஓங்காரத்தின் வடிவாகிய அகாரம், உகாரம், மகாரம்) **जगति**-உலகத்தில்; **त्रिधा**-மூன்ருக; **नियमितम्**-பரிச்சேதம் (பிரிவு) செய்யப்பட்ட; **यत्-किंचित्**-எந்த எந்த; **वस्तु**-வஸ்துவானது; (இருக்கின்றதோ) **तत्**-அந்த; **सर्वम्**-எல்லா வஸ்துவும்; **तत्त्वतः**-உண்மையிலேயே; **त्रिपुरा-इति**-த்ரிபுரா என்ற; **ते**-உன்னுடைய; **नाम** - பெயரை; **अन्वेति**-அனுஸரிக்கின்றது.

(பொழிப்புரை)

ஷாட்குண்ய பரிபூர்ணே! (ஆறு குணங்களாவன-ஐச்வர்யம், வீர்யம், யசஸ், ஸ்ரீ, ஞாநம், வைராக்யம்

என்பன. இவைகள் குறைவில்லாது நிரந்தரமாக ஸ்ரீ தேவியினிடமிருப்பதாகும்.) ஓ தாயே! பிரஹ்ம-விஷ்ணு-மஹேசர்களும்; வஸு-ருத்ர-ஆதித்யர்களும், அக்நி-வாயு-ஸூர்யர்களும், கார்ஹபத்ய, ஆஹவநீய, தக்ஷிணாக்நிகளும்; பௌம (பூமியிலிருப்பது) ஜாடர (ஜடரத்திலிருப்பது) பாடவ (ஸமுத்திரத்தி லிருப்பது) என்றவைகளும்; இச்சா, ஞான, க்ரியா சக்திகளும், உதாத்த-அநுதாத்த-ஸ்வரிதங்களும்; ஸ்வர்க-பூமி-பாதாளங்களும்; மூன்று பாதங்களையுடைய காயத்ரியும்; தேவ, ரிஷி, பித்ருக்களும்; புஷ்டியைக் கொடுக்கின்ற மூன்று தீர்த்தங்களும்; ரிக், யஜுஸ், ஸாம வேதங்களும்; அகார-உகார-மகார-வடிவாயமைந்த ஓங்காரமும்; ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா, என்றவைகளும்; குணபேதத்தால் மூன்று விதமாகப்பிரிந்த பிரக்ருதி, விக்ருதி, புருஷன் என்றவைகளும், ஸ்வரங்களும்; வ்யஞ்ஜநங்களும்; இரண்டு விதமான அநுஸ்வார-விஸர்கங்களும், வெளுப்பு, சிவப்பு, கருப்பு என்ற வர்ணங்களும்; ப்ராஹ்மண - க்ஷத்ரிய - வைசிய - வர்ணங்களும்; மற்றும் இவ்வுலகில் மூன்று எண்களால் ஸத்வம் முதலிய குணங்களைக் கொண்டு எந்தெந்த வஸ்துக்கள் குறிக்கப்படுகின்றனவோ அவைகளும்; தர்ம, அர்த்த-காமங்களும்; (அறம், பொருள், இன்பம்) ஜாக்ரத், ஸ்வப்ந-ஸுஷுப்திகளும்; ப்ராதஃ, மத்யாஹ்நஃ, ஸாயம் (காலை, நண்பகல், மாலை) என்ற ஸந்திகளும்; இடா, பிங்களா, ஸுஷும்ணா என்றநாடிகளும்; பூர், புவஃ, ஸுவஃ (பூலோகம்- புவர்லோகம்-ஸுவர்லோகம்) என்றவைகளும்; பூத-பவிஷ்யத்-வர்த்தமானம் (இறந்தகாலம், வருங்காலம், நிகழ்காலம்) என்றவைகளும்; இவைகளைப் போல மற்றும் எந்த எந்த

வஸ்துக்கள் மூன்று விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றவோ அவைகளெல்லாம், உன்னுடைய த்ரிபுரா என்ற பெயரைக் காரணமாகக் கொண்டு பின் தொடரப்படுகின்றன.

**तत्त्वत :-** உண்மையிலேயே-என்றதால் முன்பு கூறிய பிரஹ்ம விஷ்ணு மஹேசர்கள் முதலிய த்ரிபுடிகளெல்லாம் உண்மையில் த்ரிபுரா என்ற பெயரைக் காரணமாகக் கொண்டது என்பதை வலியுறுத்துவதாகும். அவ்வித மில்லாவிடினும், இவைகளெல்லாம் உனது இருப்பிடமாகிய த்ரிபுரா என்ற நகரமாகவேனும் கொள்ள முடியுமென்பதும் ஸாரமாகும்.

(விரிவுரை)

இந்த ச்லோகத்திற்கு விசேஷமாகச் சிற்சில பதங்களுக்குத் தமது விவரணத்திலே ஸ்ரீஸோமதிலகர் என்ற உரையாசிரியர் உபாஸநாபரமாகவே ஸம்பிரதாயத்தைத் தழுவிப் பொருள் கூறுகிறார். அது வருமாறு.—

"தேவாநாம்" என்ற பதத்திற்கு மூன்று குரவர்கள் என்றும், அவர்கள் முறையே குரு, பரமகுரு, பராத்பரகுரு என்றும்; 'ஹுதபுஜாம்த்ரயீ" என்பதற்கு மூன்று ஒளிகள் என்றும்; அவை முறையே ஹ்ருதயத்திலும், நெற்றியிலும், சிரஸிலும், என்றும்; 'சக்தித்ரயம்' என்பதற்கு முறையே பிராஹ்மீ, வைஷ்ணவீ; மாஹேச்வரீ எனவும்; 'த்ரிஸ்வரா :-' அகாரம், இகாரம், பிந்து எனவும்; த்ரைலோக்யம்' என்பதற்கு முறையே மூலாதாரம், ஸ்வாதிஷ்டாநம், மணிபூரகம், ஒன்று; ஆஹார-நிரோத விசுத்தி, இரண்டு; ஆஜ்ஞா-ஸ்பர்ச-ப்ரஹ்மஸ்தானம் மூன்று; ஆக மூன்று உலகமென்றும்; 'த்ரிபதீ, என்பதற்கு, ஜாலந்தரம், காம

ரூபம், ஒட்யாணம் என்ற மூன்று பீடங்கள் என்றும்; அவ்விதமில்லாவிடில் கமநாநந்த - பரமாநந்த - கம்லாநந்த என்ற மூன்று நாமாக்கள் எனவும்; 'த்ரிபுஷ்கரம்' என்பதற்கு சிரஸ்-நாபி-ஹ்ருதயகமலமென்றும்; த்ரிப்ரஹ்ம' என்பதற்கு, அதீததம் (சென்றது) அநாகதம் (வரப்போவது வர்த்தமான (நடப்பது) இவைகளை விளங்கச் செய்கின்ற ஹ்ருதயாகாசம், த்வாதசாந்தம், ப்ரஹ்மரந்த்ரம், எனவும்; 'த்ரயோ வர்ணாஃ' என்பதற்கு, வாக்பவம், காமராஜம், சக்தி பீஜம் எனவும்; அல்லது மூலமந்த்ரமே மூன்று அக்ஷரங்கள் எனவும்; முடிவில் மூன்று பத்மங்கள், மூன்று முத்ரைகள்; மூன்று தேவிகள்; மூன்று ஸித்திகள்; மூன்று தூதிகள்; மூன்று பீடங்கள்; மூன்று மந்த்ரங்கள், மூன்று விருக்ஷங்கள்; மூன்று ஸமுத்ரங்கள்; மூன்று ஸமாதிகள்; மூன்று கலைகள் முதலியவைகள் யாவும் ஸ்ரீமஹாத்ரிபுரஸுந்தரியினுடைய ஸ்வரூபங்களெனவும் பொருள் கூறுகிறார். மற்றுமுள்ள ரஹஸ்யார்த்தங்களை மற்ற உரையாசிரியர்களுடைய கிரந்தங்களிலிருந்து தெரிந்து கொள்ள வேண்டுவதாகும். (16).

(அவதாரிகை)

முன் ச்லோகங்களிலே பரா-அபரா என்ற இரண்டு விதமான சிவசக்தியின் வடிவாகிய விபூதியோடு கூடிய ஸ்ரீதேவியினுடைய இரண்டு ஸ்வரூபத்தையும், த்ரிபுரா என்ற நாமத்தின் பெருமையையும் சொல்லப்பட்டது. அடுத்துவரும் இந்தச்லோகத்திலே எந்த எந்த காரியங்களை உத்தேசித்து எந்த எந்த நாமங்களை ஸ்மரணம் செய்ய வேண்டுமென்பதை உபதேசிக்கப்படுகிறது.

लक्ष्मीं राजकुले जयां रणमुखे क्षेमंकरीमध्वनि
क्रव्याद्द्विपसर्पभाजि शबरीं कान्तारदुर्गे गिरौ।
भूतप्रेतपिशाचजम्भकभये स्मृत्वा महाभैरवीं
व्यामोहे त्रिपुरां तरन्ति विपदस्तारां च तोयप्लवे ॥१७॥

(பதவுரை)

हे भगवति-ஓ தாயே! राज-कुले- அரச குலத்திலுள்ளவர்; लक्ष्मीम्-மஹாலக்ஷ்மீ யென்றும்; रण-मुखे-யுத்தத்தின் துவக்கத்தில்; जयाम्-ஜயாதேவியென்றும்; क्रव्याद्-द्विप-सर्प-भाजि-புலிகளாலும், காட்டுயானைகளாலும், ஸர்ப்பங்களாலும் ஆக்ரமிக்கப்பட்ட; अध्वनि—வழியில்; क्षेम-करीम्-க்ஷேமங் கரீயென்றும்; कान्तारदुर्गे - காடுகளாலும், அகழிகளாலும் பிரவேசிக்க முடியாத; गिरौ- மலையில்; शबरीं—சபரீ என்றும்; भूत -प्रेत—पिशाच जम्भक - भये - பூதங்கள், ப்ரேதங்கள், பிசாசங்கள், ராக்ஷஸர்கள் முதலியவர்களிடமிருந்து உண்டாகும் பயத்தில்; महा-भैरवीम्-மஹாபைரவீயென்றும்; व्यामोहे - சித்தப்ரமத்தில்; त्रिपुराम् - த்ரிபுரா என்றும்; तोयप्लवे-ஜலத்தில் முழுகிய ஸமயத்தில்; ताराम् - தாரா என்றும்; (त्वाम्-உன்னை) स्मृत्वा - நினைத்து (ஸ்மரணம் செய்து) विपदः - ஆபத்துக்களை; तरन्ति-கடக்கின்றனர்.

(பொழிப்புரை)

ஓ தாயே! பக்தர்கள் உன்னை அடியில் கண்ட ஏழு இடங்களிலும் ஸ்மரணை செய்து விபத்துக்களைக் கடக்கின்றனர். அந்த ஏழு இடங்கள் வருமாறு—அரசகுலத்திலுள்ளவர்கள் ஸகலஐச்வர்யத்தையும் கொடுக்க வல்ல மஹாலக்ஷ்மீ

யென்றும்; போர்வீரர்கள் போர்க்களத்திலே ஜயத்தைக் கொடுக்கவல்ல ஜயாதேவியென்றும்; புலி, காட்டுயானை, ஸர்ப்பங்கள்முதலிய துஷ்ட ஜந்துக்கள் நிறைந்த வழியிலே, க்ஷேமத்தைச் செய்கின்ற க்ஷேமங்கரீ யென்றும்; காடுகளாலும், அகழிகளாலும் சூழப்பட்டு பிரவேசிக்கமுடியாத பர்வதத்தில் சபரீயென்றும்; பூத - ப்ரேத - பிசாச - ராக்ஷஸர்களால் ஏற்படுகின்ற பயத்தில் மஹாபைரவீ யென்றும்; சிந்தைகலங்கிய காலத்திலே ஸ்ரீத்ரிபுரா என்றும்; ஜலத்தில் முழுகிய நிலையிலே தாரா என்றும் உன்னை யுபாஸித்து அந்த அந்த விபத்துக்களை யெல்லாம் கடக்கின்றனர்.

(விரிவுரை)

இங்கே சொல்லப்பட்ட லக்ஷ்மீ, ஜயா, க்ஷேமங்கரீ, சபரீ, மஹாபைரவீ; த்ரிபுரா; தாரா என்ற ஏழு நாமாக்களுடைய ஜபக்ரமங்களை, அடுத்த ச்லோகத்தில் மந்த்ரபாராயணத்தில் விளக்கப்படும். இந்த நாமாக்கள் யாவும் சப்தத்தால் பேதமேயன்றி அர்த்தத்தில் பேதம் கிடையாது. மற்ற விசேஷங்களையும், த்யாநக்ரமங்களையும், ஸித்தியின் பொருட்டு ஸ்ரீ குருபரம்பரையின் வழியாக ஆங்காங்கு உரையாசிரியர்களுடைய க்ரந்தங்களின் உதவி கொண்டு தெளிதல் வேண்டும். (17)

(அவதாரிகை)

முன் ச்லோகத்திலே ஸ்ரீதேவியினுடைய ஏழு நாமாக்களையும், அவைகளை யுபாஸிக்கின்ற ஸந்தர்ப்பங்களையும், பலன்களையும் சொல்லி, இப்பொழுது ஸ்ரீதேவியினுடைய மந்த்ரபாராயணத்தையும், அதனுடைய பெருமையையும் விளக்கப்படுகிறது.

माया कुण्डलिनी क्रिया मधुमती काली कला मालिनी
मातङ्गी विजया जया भगवती देवी शिवा शांभवी ।
शक्तिः शंकरवल्लभा त्रिनयना वाग्वादिनी भैरवी
ह्रींकारी त्रिपुरा परापरमयी माता कुमारीत्यसौ ॥ १८ ॥

(பதவுரை)

ஓ தாயே! உன்னை; **माया** - *மாயா* (1) **कुण्डलिनी** - *குண்டலினீ* (2) **क्रिया** - *க்ரியா* (3) **मधुमती** - *மதுமதீ* (4) **काली** - *காளீ* (5) **कला** - *கலா* (6) **मालिनी** - *மாலினீ* (7) **मातङ्गी** - *மாதங்கீ* (8) **विजया** - *விஜயா* (9) **जया** - *ஜயா* (10) **भगवती**-*பகவதீ* (11) **देवी** - *தேவீ* (12) **शिवा**-*சிவா* (13) **शांभवी**-*சாம்பவீ* (14) **शक्तिः**-*சக்தி* (15) **शंकरवल्लभा**-*சங்கர வல்லபா* (16) **त्रिनयना**-*த்ரிநயநா* (17) **वाग्वादिनी**-*வாக்வாதிநீ* (17) **भैरवी** - *பைரவீ* (19) **ह्रींकारी** - *ஹ்ரீங்காரீ* (20) **त्रिपुरा**-*த்ரிபுரா* (21) **परापरमयी**-*பராபரமயீ* (22) **माता**-*மாதா* (23) **कुमारी**-*குமாரீ* (24) **इति-असौ**; *என்று மிகவும் பிரஸித்தமான நாமாக்களால் ஜபம் செய்கின்றனர்.*

(பொழிப்புரை)

*இந்த ச்லோகத்திலே மந்திரபாராயணத்தினுடைய க்ரமத்தைச் சொல்லப்படுகிறது. அந்த மந்த்ரபாராயண மானது ஆறுவித பாராயணங்களில் ஒன்ருகும். அது வருமாறு:—மாயா ஹ்ரீங்காரம்; குண்டலிநீ-ஐங்காரம்; க்ரியா-க்லீங்காரம்; ம-து-ம-தீ-அ என்பது சுத்த மாத்ருகை யாகும். அம் என்பது பிந்துவோடு கூடிய மாத்ருகை. அ: என்பது விஸர்க்கத்தோடு கூடிய மாத்ருகை. அ:-ம் என்பது பிந்து விஸர்க்கத்தோடு கூடிய மாத்ருகை. காளீ,*

கலா, மாலிநீ, மாதங்கீ, விஜயா, ஜயா, பகவதீ; தேவீ, சிவா, சாம்பவீ, இவ்விதம் பத்து நாமங்களாகும்.

(விரிவுரை)

சக்தி :-ஸௌ:; சங்கரவல்லபா - ஹ்ஸ்ரீம்; ஹ்ஸ்ரூம்; த்ரிநயநா, வௌஷட்; வாக்வாதிநீ- ஐம் वद वद वाग्वादिनी ஸ்வாஹா; பைரவீ-ஹஸ்ரைம்; ஹ்ஸ்ரீம்; ஹ்ஸ்ரௌ:; ஹ்ரீம் காரீ-ஹ்ரீம்; த்ரிபுரா-ஹஸகல்ஹ்ரீம்; ஹஸகஹ; லஹ்ரீம்; ஸகல ஹ்ரீம்; பராபரமயீ-ஹஸ்ரௌம்; ஸஸ்ரௌம்; மாதா-हसकलरडैं; हसकलरडीं; हसकलरडौः; குமாரீ; ऐं क्लीं, सौः; இவ்விதம் பத்து மந்திரங்கள். இம்மந்த்ரங்களில் சங்கரவல்லபா மந்த்ரம், ஹ்ஸ்ரீம் என்றும்; த்ரிநயநாமந்த்ரம் க்லீம் என்ற பக்ஷங்களுமுண்டு. இவ்விதம் இந்த ச்லோகத்தைக் கொண்டு ஹ்ரீங்காரம் முதலிய பீஜங்களும், அகாரம் முதலிய நான்குவித மாத்ருகைகளும், காளீமுதலிய நாமங்களும், சக்தி முதலிய மந்த்ரங்களும் வெளியிடப் பட்டன. இவைகளுடைய பரஸ்பர சேர்க்கைகள்தான் மந்த்ர பாராயணமென்பதாம்.

ஆதிபராசக்தியாகிய ஸ்ரீமஹாத்ரிபுரஸுந்தரியை ஒன்பது வயதுள்ளவளாக த்யாநம் செய்யும்பொழுது பாலா அல்லது த்ரிபுரா என்றும், பதினைந்து வயதுள்ளவளாக த்யாநம் செய்யும்பொழுது ஸ்ரீவித்யா என்றும், பதினாறு வயதுள்ளவளாக த்யாநம் செய்யும்பொழுது ஷோடசீ என்றும், ப்ரௌடா வஸ்தையில் மஹாஷோடசீ என்றும் வ்யவஹாரம் செய்யப் படுகிறது. இவைகளுடைய த்யாநங்களும், மந்த்ரங்களும், ஆகமங்களிலும், தந்த்ரசாஸ்த்ரங்களிலும் விரிவாக விளக்கப் பட்டுள்ளன.

எனினும் ஸ்ரீதேவியையுபாஸித்து ஸித்தியடைந்த மஹாத்மாக்கள் யாவரும் ஸ்ரீவித்யாவிஷயமாக ஷட்பாராயணத்தையும் செய்து, அதனாலேற்பட்ட மஹத்தானதும், அழியாததுமான பெருமையையும் யடைந்தனர். ஆதலால் ஸ்ரீவித்யையினுடைய சுத்த ஜபமல்லாது, மற்றும் ஸ்ரீவித்யா ஸந்த்யாவந்தநம், ஸ்ரீசக்ரபூஜை முதலியவைகளில் ஸ்ரீவித்யயை பாலர்ஸம்புடிதமாகச் செய்து உபாஸிப்பது ஸாதாரண ஸம்பிரதாயமா யிருக்கின்றதால், இவ்விடத்தில் ஷட்பாராயணங்களையும் ஸ்ரீவித்தைக்கு அங்ககமாக் கொண்டு சற்று விரிவாக எழுத வேண்டியது அவசியமாகும்.

ஷட்பாராயண மேன்பது மிகவும் ரஹஸ்யமானது. அது அநுஷ்டானத்திலே உறுதி கொண்டு ராஜயோகாதிகளை ஸித்தி பெறச் செய்து, அதன் வழியாக ஸ்ரீமஹாதேவியை நேரில் தர்சனம் செய்யக்கூடிய ஒரு உத்தமமான மார்க்கமாகும். இம் மார்க்கத்திற்கு ரிஷி, சந்தஸ், ந்யாஸம், த்யாநம் முதலியவைகளும், கால், தேச, நிர்ணயங்களும் அவச்யமில்லை.

ஸ்ரீவித்யாமந்த்ரத்தை அக்ஷரலக்ஷம் ஜபம் செய்து அதனுடைய தசாம்சம்-பத்தில் ஒரு பங்கு-ஹோமாதிகளையும், செய்தால் அதற்கு எவ்வளவு பலன்களுண்டோ, அவ்வளவு பலன்கள் இந்த ஷட்பாராயணத்திற்கு முண்டு. வைதிகர்களுக்கு எவ்விதம் பஞ்சாங்கம்-முக்யமோ, அவ்விதமே தாந்த்ரிகர்களுக்கு (சாக்தர்களுக்கு அல்லது ஸமயிகள்) அஷ்டாங்கத்தை முக்யமாகக் கொண்ட இந்த ஷட்பாராயணத்திலே, இந்த மந்த்ர பாராயணத்தை யொழித்த மற்ற ஐந்து பாராயணங்களையும் அவச்யமெனக்கருதி, தந்த்ரசாஸ்த்

ரங்களிலே நியமம் செய்திருக்கிறது. இவ்விதச் சிறப்புடன் கூடிய மந்த்ரபாராயணத்தை இங்கே விளக்கி, அடுத்த ச்லோகத்திலே எஞ்சிய ஐந்து ப்ாராயணங்களையும் முறையே விளக்குவோம்.

ஓங்காரத்தோடும், மூன்று தாரங்களோடும் சேர்ந்திருக்கின்ற ஸ்ரீவித்யாமந்த்ரத்தில் முறையே மாயா பீஜத்தையும்; குண்டலினீ பீஜத்தையும்; க்ரியா பீஜத்தையும் சேர்த்து சுத்தமாகவும் பிந்துவோடு கூடியதாகவும்; விஸர்க்கத்தோடு கூடியதாகவும்; பிந்துவிஸர்க்கத்தோடு கூடியதாகவும்; மாத்ருகாக்ஷரங்களையும் சேர்த்து, காளீ முதல் பத்து நாமாக்களையும் முறையே உச்சரித்து, சக்தி முதல் பத்து மந்த்ரங்களையும் முறையே சேர்த்து, ஜபம் செய்வதுதான் மந்த்ர பாராயணமென்பது. இம்முறையை யநுஸரித்து ஒரு ஆவர்த்தி மந்த்ரபாராயணம் செய்யும் பொழுது ஆறுயிரத்து நூற்றிருபது (6120) எண்களாகும். அது வருமாறு:—

ओ ऐं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं; ह स क ल ह्रीं ;
स क ल ह्रीं श्रीं ह्रीं अकाली सौः। (१)
ओं ऐं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं; ह स क ह ल ह्रीं ;
स क ल ह्रीं श्रीं ह्रीं अकाली सौः (२)
ओ ऐं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं; ह स क ह ल ह्रीं ;
स क ल ह्रीं श्रीं ह्रीं इकाली सौः (३)

இவ்விதம் சுத்தமாத்ருகாக்ஷரங்களையெல்லாம் சேர்த்து ஜபம் செய்யும்பொழுது ओं ऐं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं; ह स क ह ल ह्रीं; स क ल ह्रीं श्रीं ह्रीं क्षकाली सौः என்பது வரையில் ஐம்பத்தொரு (51) மந்த்ரங்களாகின்றன.

இம்முறைப்படி பிந்துவோடு கூடிய மாத்ருகைகளுடைய சேர்க்கையிலும், ஐம்பத்தோரு மந்த்ரங்கள் கிடைக்கின்றன. எவ்விதமெனில்; ओं ऐं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं ; ह स क ह ल ह्रीं ; स क ल ह्रीं श्रीं ह्रीं; अं काली सौः என்பது முதல் क्षं काली என்பது வரையில் ஜபம் செய்தால் அப்பொழுது நூற்றிரண்டு (102) எண்ணிக்கைகளாகும்.

இது போலவே விஸர்க்கத்தோடு கூடிய மாத்ருகாக்ஷரங்களைச் சேர்க்கும் பொழுதும்; பிந்துவிஸர்க்கத்தோடு கூடிய மாத்ருகாக்ஷரங்களைச் சேர்க்கும் போழுதும், முறையே நூற்றிரண்டு (102) எண்ணிக்கைகள் வரும். அப்பொழுது ஹ்ரீம்காரத்தினுடைய சேர்க்கையால் நான்குவித மாத்ருகைகளாகி இருநூற்றுநான்கு (204) எண்ணிக்கைகள் கிடைக்கும்.

இதே போல ஹ்ரீங்காரத்தின்முன்பு ஐம்காரத்தைச் சேர்த்தும், அவ்விதமே க்லீங்காரத்தையும் சேர்க்க முறையே இருநூற்றுநான்கு (204) விதம் கிடைக்கும். ஆகவே காளியினுடைய நாமத்தில் அறுநூற்றுப் பன்னிரண்டு (612) எண்ணிக்கைகள் வரும். இவ்விதமே காளீ நாமத்தினுடைய ஸ்தானத்தில் கலாநாமத்தையும், அதேபோல மாலினீ முதல் சாம்பவீவரையிலுள்ள நாமங்களையும் சேர்த்து ஜபம் செய்யும் பொழுது ஆறுயிரத்து நூற்றிருபது (6120) வரும்.

மறுபடியும் சக்தி ஸ்தானத்தில் சங்கரவல்லபா மந்த்ரத்தைச் சேர்த்து இதே போல ஜபம் செய்யவேண்டும். அது எவ்விதமெனில் ; ओं ऐं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं ह स क ह ल ह्रीं स क ल ह्रीं श्रीं ह्रीं अ काली ह्स्रीं ह्स्रूं; ओं ऐं ह्रीं श्रीं क ए ई ल ह्रीं ह स क ह ल ह्रीं स क ल ह्रीं श्रीं ह्रीं काली ह्स्रीं ह्स्रूं

என்பது போல க்ஷகாரம் வரையிலும், மறுபடியும் முன் போல பிந்துக்களோடு கூடிய மாத்ருகைகளையும், கலாமுதலிய பத்து நாமங்களையும் சேர்த்து ஜபம் செய்யும் பொழுது முன்போலவே ஆறுயிரத்துநூற்றிருபது (6120) எண்ணிக்கைகள் கிடைக்கும்.

மறுபடியும் சங்கரவல்லபா என்ற ஸ்தானத்தில் த்ரிநயநா முதலிய மந்த்ரங்களை முறையே சேர்க்கவேண்டும். இவ்விதமே குமாரீ மந்த்ரம் வரையிலும் சேர்க்கவேண்டும். இப்படிச் சேர்க்கும் பொழுது கிடைக்கக்கூடிய எண்ணிக்கைகள் (6120) கிடைக்கும். மற்றவிடங்களிலும் முன் போலவே கண்டு கொள்ளவேண்டும்.

மற்றும் காளீநாமத்தோடு கூட, கலாநாமத்தைச் சேர்த்து **श्रीं अकालीकलासौः; आकालीकलासौः** என்பது முதல், **क्षकालीकलामातङ्गीसौः** என்பவைகளை மேலே சொன்ன விதம் சாம்பவீநாமம் வரையில் சேர்க்கும்பொழுது, ஐம்பத்தைந்தாயிரத்து எண்பது (55080) எண்ணிக்கைகள் ஆகின்றன. ஆகவே ஒரு லக்ஷத்து பதினாறுயிரத்து இரு நூற்று எண்பது (116280) மந்த்ரங்கள் கிடைக்கின்றன.

இவ்விதம் முன் ச்லோகத்திலே சொல்லிய லக்ஷ்மீ முதலிய ஏழு நாமாக்களையும், **ह्रीं अलक्ष्मीसौः, ह्रीं अजयासौः** என்பது போலவே ஜபம் செய்தால் அதனால் கிடைக்கக் கூடிய மந்த்ரங்களுடைய எண்ணிக்கைகள் 42840 ஆகின்றன. மறுபடியும் முன்பு சொன்னது போலவே லக்ஷ்மீ நாமத்தோடுகூட ஜயா முதலிய நாமங்களை **ह्रींअलक्ष्मी-जयासौः; ह्रींअलक्ष्मीक्षेमंकरीसौः; ह्रीं अलक्ष्मीजयाशबरीसौः;** என்பது போல முன்றயே ஜபம் செய்தால் மந்த்ரஸங்க்யை

(36720) கிடைக்கும். ஆகவே மொத்தம் கிடைக்கின்ற மந்த்ரஸங்க்யை ஒருலக்ஷத்து தொண்ணூறாயிரத்து எண்ணூற்று நாற்பதாகும் 190840.

இவ்விதம் எல்லா மந்த்ரங்களிலும் முதலில் சொல்லியது போல ப்ரணவமும், தாரத்ரயமும், மூல மந்த்ரமும் சேர்ந்து வருமென்பதை மறப்பது கூடாது. மற்றும் இங்கு ஒரு விஷயத்தைச் சொல்லவேண்டியிருக்கிறது. அதாவது பிந்துவில் பிந்துவும், விஸர்க்கத்தில் விஸர்க்கமும், லோபமடையும் என்ற மந்தரசாஸ்த்ரமரபை யநுஸரித்து ஜபகாலத்தில், ஷ் என்பது 15ம், அ: என்பது 16ம் ஸ்வரங்களில் சில வித்யாஸங்கள் செய்வதாலுண்டாகின்றன. பிந்துவோடு கூடிய மாத்ருகையில் அஂ என்ற ஸ்வரத்தில் பிந்துலோபமடைந்தால் அ என்பது கிடைக்கும். விஸர்க்கத்தோடு கூடிய மாத்ருகையில் அ: என்ற ஸ்வரமானது விஸர்க்கத்தை விடும்பொழுது கிடைக்கின்றது அ என்பதே. இவ்விதமே பிந்துவிஸர்க்கத்தோடு சேர்ந்த மாத்ருகையில் அஂ என்ற பதினைந்தாவது ஸ்வரம், அ: என்றும்; அ: என்ற பதினாறுவது ஸ்வரம் அஂ என்றும் மாறுபடும். பிந்து விஸர்க்கங்கள் இரண்டும் சேரும்பொழுது எழுதவேண்டிய முறை வருமாறு. அஂ: என்பது. இதை யுச்சாரணம் செய்யும் முறையும் அஂ ஹ எனவும் ஸித்தமாகிறது. விதிப்படி ஸரியாகச் செய்யும் மந்த்ரபாராயணமும் இதுவே யாகும்.

(அவதாரிகை)

முன் ச்லோகத்திலே மந்த்ரபாராயணக்ரமம் விளக்கப்பட்டது. இப்பொழுது அடுத்து வரும் இந்த ச்லோகத்திலே ஆகமங்களில் விளக்கப்பட்ட ஸ்ரீத்ரிபுரஸுந்தரியி

னுடைய நாமோத்பத்தியும், அந்த நாமங்களுடைய எண்ணிக்கைகளையும், அவைகளை பாராயணம் செய்யவேண்டிய முறைகளையும் விளக்கப்படுகிறது.

**आईपल्लवितैः परस्परयुतैर्द्विद्विक्रमादक्षरैः**
**काद्यैः क्षान्तगतैः स्वरादिदिभिरथ क्षान्तैश्च तैः सस्वरैः ।**
**नामानि त्रिपुरे भवन्ति खलु यान्यत्यन्तगुह्यानि ते**
**तेभ्यो भैरवपत्नि विंशतिसहस्रेभ्यः परेभ्यो नमः ॥ १९ ॥**

(பதவுரை)

हे **भैरवपत्नि**-ஹே ஸதாசிவமஹிஷி ! (ஸதாசிவனுடைய மனைவி) **आई-पल्लवितैः**—ஆ ஈ. என்ற ஸ்வராக்ஷரங்களுடைய கடைசியிலுள்ள ; **स्वर-आदिभिः**—அகாரம் முதலிய பதினாறு ஸ்வரங்களோடு ஆரம்பமாகின்றவைகளும் ; **क्ष-अन्त-गतैः**—க்ஷகாரமென்ற ஸம்யுக்தாக்ஷரத்தினுடைய கடைசியையடைந்த ; **क-आद्यैः**—ககாரத்தை முதலாகக் கொண்டவைகளோடு ஆரம்பிக்கின்றவைகளும் ; **द्वि-द्वि-क्रमात्** - நான்கு நான்கு அக்ஷரங்களாக முறையே; **परस्पर-युतैः**—ஒன்றோடொன்று சேர்ந்தவைகளும் ; **अथ**-பிறகு ; **सस्वरैः**—அ முதல் பதினாறு ஸ்வரங்களோடு சேர்ந்தவைகளும் ; **क्ष-अन्तैः**-க்ஷ என்ற அக்ஷரத்தைக் கடைசியாகக் கொண்டவைகளும் ; **तैः-च-अक्षरैः**- ஆகாரம் முதலிய அக்ஷரங்களோடு சேர்ந்தவைகளும்; **अत्यन्त-गुह्यानि**-மிகவும் ரஹஸ்யமாயுள்ளவைகளுமான ; **तव**-உன்னுடைய ; **यानि**-எந்த; **नामानि**-நாமங்கள் ; **भवन्ति-खलु**-பிரஸித்தி பெற்றவைகளாக இருக்கின்றனவோ ; **विंशति-सहस्रेभ्यः**, **परेभ्यः**-இருபதினாயிரத்திற்கும் அதிகமாயிருக்கின்ற ; **तेभ्यः**-அந்த நாம பாராயண மந்த்ரங்களுக்கு ; **नमः**-நமஸ்காரம்.

(பொழிப்புரை)

ஸமஸ்த த்வைதப்ரபஞ்சங்களுடைய இருளையகற்றும் ஒளியின் வடிவாயுள்ள மஹேச்வரனை பைரவனை ஆச்ரயித்துப் பிரகாசிக்கின்ற ஓதாயே! ஆ ஈ என்ற ஸ்வரங்களுடைய கடைசியிலுள்ள அகாரம் முதலிய பதினாறு ஸ்வரங்கள் முதல் க்ஷ என்ற கடைசி அக்ஷரத்தை அடைந்த ககாரம் முதலியவைகளோடு கூடியவைகளாகவும், நான்கு நான்கு அக்ஷரங்கள் சேர்ந்தவைகளாகவும்; பின்னும், அகாரம் முதல் பதினாறு ஸ்வரங்களோடு சேர்ந்து க்ஷ என்ற முடிவுகளோடு கூடிய ஆகாராதிகளோடு சேர்ந்தவைகளாகவுமிருக்கின்ற அக்ஷரங்களைக் கொண்டு மிகவும் ரஹஸ்யங்களாயிருக்கின்ற உன்னுடைய யாதொரு நாமங்களிருக்கின்றனவோ, இருபதினாயிரத்திற்கு மேற்பட்ட அந்த பிரஸித்திபெற்ற நாமபாராயணமந்த்ரங்களின் பொருட்டு நமஸ்காரம்.

(விரிவுரை)

இந்த நாமபாராயணத்தைத் தன்னிடத்தே கொண்ட ஷட்பாராயணத்தையும் இங்கே சுருக்கமாக விளக்கப்படுகிறது. ஷட்பாராயணமென்பது வருமாறு: நாதபாராயணம்; கடிகாபாராயணம்; தத்துவபாராயணம்; நாமபாராயணம்; நித்தியாபாராயணம்;, மந்த்ரபாராயணம் என ஆறு விதமாகும். இவைகளில் மந்த்ரபாராயணம் முன் ச்லோகத்திலே விளக்கப்பட்டது. ஆகவே அதைவிடுத்து மற்ற ஐந்து பாராயணங்களையும் சாக்தர்கள் (சக்தியுபாஸகர்கள்) அஷ்டாங்கத்தை முக்கியமாகக் கொண்டு நித்யமாயநுஷ்டானம் செய்து வருவதால் அவர்களுடைய விளக்கத்தின்

பொருட்டு அஷ்டாங்கங்களையும் இங்கு ஸங்க்ரஹமாகக் கொடுக்கப்படுகிறது.

அதாவது கடிகை; வாரம்; திதி; தினம்; மாஸம்; வர்ஷம்; பரிவ்ருதி; யுகம் இவைகளே அஷ்டாங்கங்களாகும். இவைகளெல்லாம் மாத்ருகாக்ஷரங்களுடைய வடிவங்களாம். பத்து(10) அக்ஷரங்கள் கொண்டது ஆறு (6) கடிகை, ஒருதினம்; மாத்ருகாக்ஷரங்களெல்லாம் அடங்கிய ஒன்பது (9) வாஸரம், ஒருவாரம்; பதினைந்து (15) ஸ்வரவடிவான பதினைந்து திதி ஒரு பக்ஷம், அ என்ற அக்ஷரமும், க முதல் க்ஷ வரையிலுள்ள முப்பத்தைந்து அக்ஷரமும் இவ்விதம் முப்பத்தாறு தினம் ஒரு மாஸம். பதினாறு ஸ்வரவடிவான பதினாறு மாஸம் ஒரு வர்ஷம். தினம் போல முப்பத்தாறு வர்ஷம் ஒரு பரிவ்ருதி. அது போல முப்பத்தாறு பரிவ்ருதி ஒரு யுகம்.

நாதபாராயணம்—அஷ்டாங்கம்; ப்ரணவம்; தாரத்ரயம் (மூன்று தாரஸ்வரங்கள்) இவைகளின் வழியாக வர்ஷ, மாஸ, தினாக்ஷரங்கள் வருமாறு—आ ई हं सं ह्रीं श्रीं என்று அந்த அந்த வாராக்ஷரங்கள் முதல் **आनन्दनाथरूपिणी श्रीमहात्रिपुरसुन्दरीपादुकां पूजयामि नमः** இவ்விதம் ஒவ்வொரு நாளும்-அதாவது வாரம் முதல் ஆரம்பித்துச்செய்து வர வேண்டும். இதுவே நாதபாராயணம்.

கடிகாபாராயணம்—அஷ்டாங்கம், ப்ரணவம், தாரத்ரயம் இவைகளின் மூலம் வர்ஷமாஸதினாக்ஷரங்கள் **आ-ई-हंसः**- அதாவது தினத்திலிருக்கிற கடிகையினுடைய முதல் அக்ஷரம், **प्रथमघटिकारूपिणी श्रीत्रिपुरसुन्दरीपादुकां पूजयामि नमः** என்பது. இவ்விதமே **द्वितीयघटिकारूपिणी, तृतीयघटि-**

க்ஷாரூபிணீ என்பது முதல் அறுபது கடிகை வரையில் அக்ஷரங்களைக் கொண்டு செய்து வரவேண்டும். இதுவே கடிகாபாராயணம்.

தத்துவபாராயணம்—சிவ-சக்தி-ஸதாசிவ-ஈச்வர-சுத்த வித்யா-மாயா-கலா-வித்யா-ராக-கால-நியதி-புருஷ-ப்ரக்ருதி-அஹங்கார-புத்தி-மந-ச்ரோத்ர-த்வக்-சக்ஷுர்-ஜிஹ்வா-க்ராண-வாக்-பாணி-பாத-பாயு-உபஸ்த-சப்த-ஸ்பர்ச-ரூப-ரஸ-கந்த-ஆகாச-வாயு-வஹ்நி-ஸலில-ப்ருத்வீ என்ற முப்பத்தாறு தத்துவங்களையும், அ-க-முதல் க்ஷ வரையிலுள்ள முப்பத்தாறு அக்ஷரங்களையும் சேர்த்துச் செய்து வரவேண்டும். இதுவே தத்துவபாராயணமென்பது.

நித்யாபாராயணம்—காமேச்வரீ, பகமாலினீ, நித்திய க்லின்நா, பேருண்டா, வஹ்நிவாஸினீ, மஹாவித்யேச்வரீ, சிவதூதீ, த்வரிதா, குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வமங்களா; ஜ்வாலாமாலினீ, சித்ரா இவ்விதம் அ முதல் அம் வரையிலுள்ள பதினைந்து ஸ்வரங்களோடு, இந்தப் பதினைந்து நித்யாதேவதைகளையும் சேர்த்து, அ: என்ற பதினாறுவது ஸ்வரத்தில் மஹாநித்யாதேவியை ஒவ்வொரு தினத்திலும் சேர்த்துச் செய்து வருவதே நித்யா பாராயணமென்பது.

நாதபாராயணம், கடிகாபாராயணம், தத்துவபாராயணம், நித்யாபாராயணம்—இந்த நான்கிலும் அஷ்டாங்கம் முதலாவதாகவும், அந்த அந்த அக்ஷரங்கள் முதல் தொடங்கி அதனுடைய முன்புள்ள அக்ஷரம் வரையில் கொண்டு வந்து நிறுத்த வேண்டுமென்பதும் ஸமாநமாகும், எனினும் நாத பாராயணத்தினுடைய வாஸராக்ஷரங்களுக்கு முன்பு ஹ்ரீ

**श्रीं** என்றும்; நித்யாபாராயணத்தினுடைய நித்யைகளுக்குள்ள ஸ்வரங்களுக்கு முன்பு, **ऐं ह्रीं श्रीं** என்றும் சேர்க்க வேண்டும். தத்துவபாராயணம், நாமபாராயணம் இந்த இரண்டிலும், அந்த அந்த திருக்ஷரம் முதல் ஆரம்பிக்க வேண்டும். நாமபாராயணத்திலோ திருக்ஷரத்தோடு மாத்திரமல்லாது அஷ்டாங்கத்தில் வேறு ஒரு ஸம்பந்தமுமில்லை. மந்த்ரபாராயணத்திற்கு அஷ்டாங்கத்தோடு ஸம்பந்தமே கிடையாது என்று முன் ச்லோகத்திலேயே விளக்கப்பட்டுள்ளது.

நாமபாராயணம்—ப்ரணவம், தாரத்ரயம், திருக்ஷரம் **आंई** என்ற ஸ்வரங்கள், ச்லோகத்தில் ஹம்ஸமந்த்ரம் விதிக்கப்படவில்லை. எனவே பரம்பரையாக வந்த உபதேசக்ரமத்தோடு ஹம்ஸமந்த்ரமும் சேர்க்கவேண்டும். அது எவ்விதமெனில், உத்தேசதினத்தினுடைய அக்ஷரத்தோடு, **ओं ऐं ह्रीं श्रीं क एई ल ह्रीं श्रींलआई हंसः**, என இவ்விதம் **लक्षाईहंसः** என்பது வரையில் முப்பத்தாறு மாத்ருகைகள் கிடைக்கின்றன. மறுபடியும் **लाआईहंसः, लाकाईहंसः, लाखाईहंसः- लाक्षाईहंसः** என இவ்விதம் முப்பத்தாறு. மறுபடியும், **लिआईहंसः, लिकाईहंसः, लिक्षाईहंसः** என இம்முறையயநுஸரித்து**ली-लु-लू-लॅ-लः**வரையில்-**लःक्षाईहंसः**என்பதுவரையில், வரும் பொழுது 76 எண்ணிக்கைகள் கிடைகின்றன. மறுபடியும் **व. श. ष.** என்றவைகளை **अ** முதல் **क्ष** வரையில் 36 திருக்ஷரங்களையும் சேர்த்துச் செய்யும் பொழுது 20736 எண்ணிக்கிடைக்கின்றன. இந்த எழுநூற்று முபபத்தாறு எண்ணிக்கைகள் அதிக மாயிருப்பது கொண்டு, **विंशति- सहस्रेभ्यः परेभ्यः**' என மூலச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்

கிறது. ஒரு திஜைக்ஷரம் கொண்டு ஒரு தினம் 576 விதம் செய்தால் ஒரு மாஸம் 36 தினம் கொண்டு இந்த பாரா யணம் ஒரு ஆவர்த்தி பூர்த்தி செய்யபடவேண்டியதாகும். இதுவே நாமபாராயண மென்பது.*

மற்றும் இந்த விம்சதி ஸ்தவத்தின் உரையாசிரியர்கள் சொல்லியிருப்பது போல இந்த நாம பாராயணத்தினுடைய மற்ரொரு வழியையும் இங்கு விளக்கப்படுகிறது. அது வருமாறு—अकाई முதல் अःकाई முடிய 16; अखाई முதல் अःखाई முடிய 16; अगाई, अघाई; अङाई இவ் விதம் अक्षाई வரையில் ஜபம் செய்யும் பொழுது 560 மந்த்ரங் கள் கிடைக்கின்றன. மறுபடியும் ककाई, काकाई. किकाई कीकाई, कः क्षाई வரையில் ஜபம் செய்யும் பொழுது 560 மந்த்ரங்கள் கிடைக்கின்றன. இந்த முறையை யனுஸரித்து खकाई; गकाई இவ்விதம் क्षः काई என்பது வரையில் ஆகும் பொழுது இந்த நாமபாராயணம் பூர்த்தியடைகின்றது. முதலாவதாகச் சொல்லியதில் ஒரு ஸ்வரத்தை 36 அக்ஷரங் களோடும் சேர்க்கவேண்டும். அவ்விதமே 16 ஸ்வரங்களை யும் ஒவ்வொரு அக்ஷரத்தோடு சேர்க்கவேண்டும். இரண் டாவதாகச் சொல்லியதில் 16 ஸ்வரத்தோடு சேர்க்க வேண்டும், அவ்விதமே 36 அக்ஷரத்தோடும் சேர்க்க வேண்டும். இந்த ஷட்பாராயணமானது ஸ்ரீமஹாத்ரிபுர ஸுந்தரியினுடைய அபரா என்ற வடிவமென்பதையும் அறியத்தக்கதாம்.

---

N. B. முப்பத்தாறு தத்வாக்ஷரங்களையும் முறையே பதினாறு உயிர்களுடன் பெருக்கினால் நாம் பெறுவது 36 × 16 – 576 அக்ஷரங்களாம்.

"**नामपारयणप्रीता**"–நாம பாராயணப்ரீதா-"நாம பாராயணத்திஞல் த்ருப்தியடைகின்றவள்" என்பது ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமமாகும. இந்த நாமபாரர்யணத்தினுடைய பெருமையை ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யத்திலும், இந்த விம்சதி ஸ்தவத்திற்குப் பல அறிஞர்கள் எழுதிய உரைகளிலும் விசேஷமாகக் காணலாம். இங்கு எனது சிற்றறிவிற்கு எட்டிய வரையில் இந்த பாராயணக்ரமங்களை ஸூசனை யாக எழுதப்பட்டதாகும். இந்த ஷட் பாராயணவிதிகளை ஸ்ரீகுருவினுடைய அநுக்ரஹத்துடன் தீக்ஷாதிகளைப் பெற்று உபதேசக்ரமமாக அநுதினமும் பாராயணம் செய்ய வேண்டியதாகும். கேவலம் புஸ்தகபாராயணமாக இருப்பது கூடாது. அது மஹாபாபமுமாகும். (19

(அவதாரிகை)

இதுவரையில் ஸ்ரீதேவினுயிடைய ஸ்துதியானது விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட்து. இனி இந்த ஸ்துதியை நன்ருகத் தெரிந்து கொண்டு அநுதினமும் அப்யாஸம் செய்துவரவேண்டுமென்பதை இந்த ச்லோகத்திலே பக்தர்களைக் குறித்து உபதேசிக்கப்படுகிறது.

**बोद्धव्या निपुणं बुधैः स्तुतिरियं कृत्वा मनस्तद्गतं**
**भारत्यास्त्रिपुरेत्यनन्यमनसो यत्राद्यवृत्ते स्फुटम् ।**
**एकद्वित्रिपदक्रमेण कथितस्तत्पादसंख्याक्षरै-**
**र्मन्त्रोद्धारविधिर्विशेषसहितः सत्संप्रदायान्वितः ॥ २० ॥**

(பதவுரை)

**हे भैरवपत्नि**-ஓ பரப்ரஹ்மமஹிஷி; **भारत्याः** வாகீச்வரியான; **तव**-உன்னுடைய; **त्रिपुरा- इति**-த்ரிபுரா என்ற; **इयम्-**

இந்த; स्तुतिः-ஸ்தோத்திரமானது; बुधैः-அறிஞர்களால்; तद्-गतम्-உன்னுடைய ஸ்தோத்திரத்திலே மனதை லயிக்கும்படி; कृत्वा-செய்து: निपुणम्-நன்கு; वोढव्या-தாரணை செய்யப்படவேண்டும். यत्र-எந்த பாரதியினுடைய ஸ்துதியில்; अनन्यमनसः-வேறுபடாத மனத்துடன் கூடிய பக்தனுண்டோ; (அவனைக் குறித்து) आद्य-वृत्ते-முதல் ச்லோகத்தில்; तत्-पाद-संख्या-अक्षरैः அதனுடைய பாத எண்ணிக்கையினாலே ஸமாநமாயிருக்கிற அக்ஷரங்களோடு; एक-द्वि-त्रि-पद-क्रमेण- ஒன்று, இரண்டு, மூன்று என்ற பாதவரிசையிலே; विशेष-सहितः விசேஷத்தோடு கூடியதாகவும்; सत्-संप्रदाय-अन्वितः-பரிசுத்தமான உபதேச பரம்பரையோடு கூடியதாகவுமிருக்கிற; मन्त्र-उद्धार-विधिः-மந்த்ரத்தினுடைய உத்தாரக்ரமமானது; स्फुटम्-தெளிவாக; कथितः-சொல்லப்பட்டதோ.

(பொழிப்புரை)

ஓ தாயே! இந்த த்ரிபுராஸ்துதியை அறிவு நிறைந்த விவேகிகள், உன்னிடத்திலே ஒன்றிய மனத்துடன் வேறு ஒன்றையும் சிந்தனையிலே கொள்ளாது, முதல் ச்லோகத்தில் வரிசையாக மூன்று பாதங்களிலே சொல்லப்பட்ட மந்த்ரங்களை, முறையே முதல் பாதத்திலே முதல் அக்ஷரத்தையும், இரண்டாவது பாதத்திலே இரண்டாவது அக்ஷரத்தையும், மூன்றாவது பாதத்திலே மூன்றாவது அக்ஷரத்தையும் கொண்டால் ஸ்ரீபாலாதேவியினுடைய மந்த்ரமானது உத்தாரம் செய்யப்பட்டதாகக் கிடைக்கும். எனவே த்ரிபுராமந்த்ரவிசேஷங்களோடு கூடியதும், ஸ்ரீகுருவினுடைய பரிசுத்தமான உபதேசஸம்ப்ரதாயத்தைத் தழுவியது

மான மந்த்ரோத்தாரத்தினுடைய முறையானது இங்கு தெளிவாகச் சொல்லப்பட்டது என்பதும் தாத்பர்யம்.

(விரிவுரை)

தவிர, நிர்தோஷமான-பரிசுத்தமான-ஸத்ஸம்பரதாயம், அதாவது ஸ்ரீகுருவினுடைய உபதேச பரம்பரையையநுஸரித்து இந்த மந்த்ரங்களுடைய உத்தாரக்ரமமானது இங்கு விளக்கப்பட்டதேயன்றி என்னுடைய புத்தியின் வன்மையாலன்று எனவும் கவியினுடைய அபிப்ராயமும் வெளியிடப்படுவதாகும். ஏனெனில் ஸ்ரீகுருபரம்பரையைத் தழுவி அந்த வழியிலே வந்த மந்த்ரமே விரும்பிய பலன்களை யளிக்கவல்லதாம். ஆகவே ஸாவதானமான-நிதானமான-மனத்துடன் உபதேசத்தைப் பெற்று அநுஸந்தானம் செய்ய வேண்டியது அறிஞர்களுடைய கடமையுமாகுமென்பதும் கிடைக்கின்றது.

மற்றும் இந்த பாரதிதேவியினுடைய ஸ்துதியானது வேதத்தைப் போலவே அபௌருஷேயமானது கொண்டு ஸ்வதந்த்ரப்ராமாண்ய முள்ளது என்பதும் கிடைக்கின்றது. இவ்விதம் கர்த்ருத்வத்தினாலும், விஷயத்தினாலும், ஸ்வரூபத்தினாலும், இந்த ஸ்துதிக்குத் தனிப்பட்ட ஒரு சிறப்பு உண்டு என்பதும் தெளிவாம்.

"அந்த அந்த விஷயங்களை மிகவும் பரிசுத்தமான ஆகமஞானங்களைத் தள்ளி, தனது புத்தியின் வலுவைக் கொண்டு உத்தானத்ருஷ்டி-மேலெழுந்த-பார்வை-யுடன் பார்க்கின்றவர்களும், முதிர்ந்த அறிவுடன் கூடிய பெரியோர்களை ஸேவிக்காதவர்களுமான மக்களுக்கு ஸ்ரீபாரதிதேவி

யினுடைய அருள் வடிவாயமைந்த ப்ரஜ்ஞா-புத்தி-விசேஷமானது உண்டாகாது"[1] என ஸ்ரீபகவான் பர்த்ருஹரி கூறியிருப்பது போல, பரிசுத்தமான பாரம்பர்யம்-குலவொழுக்கம்-இல்லாமலும், வித்யாவிருத்தர்களை ஸேவிக்காமலும், கேவலம் தனது புத்தியின் வன்மை கொண்டு க்ரந்தங்களைப் பார்த்துப் பொருள் கொள்வதுமான வித்யையானது ஒருக்காலும் மேன்மையடையாது என்பதையும் இந்த ச்லோகம் வலியுறுத்தும். (20)

(அவதாரிகை)

இவ்விதம் இந்த ஸ்தவமானது தோஷமற்றதாயிருந்தாலும், காவ்ய லக்ஷணங்களுக்குரிய சப்தம், அர்த்தம் என்ற இரண்டுவித அலங்காரங்கள், ஒன்றும் இல்லாத காரணத்தால் ரஸிகர்கள் எவ்விதம் இதை அப்யாஸம் செய்வார்கள்? என ஸந்தேஹமடைகின்றவர்களைக் குறித்து, கவியானவர்; இந்த ஸ்துதியானது ஸ்ரீபரதேவதையினுடைய பக்தியுபாஸனையை முக்யமாகக் கொண்டதாலும், அந்த பக்தியினுடைய வன்மை கொண்டு என்னையுமறியாது உண்டாகியதாலும், ஸ்ரீதேவியினுடைய ஸம்பந்தத்தைப் பெற்றதாலும், ஸ்ரீதேவியினுடைய பக்தர்கள் அவச்யம் இதை அங்கீகாரம் செய்வார்கள் எனத் தனது மனவுறுதியையும், வணக்கத்தையும் இந்த ச்லோகத்தின் வாயிலாக அவர்களுக்கு அறிவித்துக்கொண்டு, இந்த ஸ்தவத்தையும் உபஸம்ஹாரம் (முடிவு) செய்கிறார்.

---

1 [illegible]दुत्प्रेक्षमाणानां विशुद्धैरागमैर्विना ।
अनुपासितवृद्धानां विद्या नाति प्रसीदति ॥

सावद्यं निरवद्यमस्तु यदि वा किं वानया चिन्तया
नूनं स्तोत्रमिदं पठिष्यति जनो यस्यास्ति भक्तिस्त्वयि ।
संचिन्त्यापि लघुत्वमात्मनि दृढं संजायमानं हठात्
त्वद्भक्त्या मुखरीकृतेन रचितं यस्मान्मयापि ध्रुवम् ॥२१॥

(பதவுரை)

हे भैरवपत्नि-ஓ பரப்பரஹ்மமஹிஷி! त्रिपुरे-முப்புரம் கொண்டவளே! सावद्यम्-நிந்திக்கத்தக்கதாகவோ; निरवद्यम्-நிந்திக்கத்தகாததாகவோ; अस्तु-இருக்கட்டும். अनया-இந்த; चिन्तया-சிந்தையினால்; किं वा-என்ன ப்ரயோஜனம்? यस्य-எவனொருவனுக்கு; त्वयि-உன்னிடத்தில்; भक्तिः-பக்தியானது; अस्ति-இருக்கின்றதோ; सः-அந்த; जनः-(மனிதன்) பக்தன்; इदम्-இந்த; स्तोत्रम्-ஸ்துதியை; पठिष्यति-பாராயணம் செய்யப்போகிறான். ध्रुवम्-நிச்சயம். आत्मनि-என்னிடத்தில்; लघुत्वम्-அல்பபுத்தியின் தன்மையை; दृढम्-உறுதியாக; संचिन्त्य-अपि-நன்கு ஆராய்ந்தறிந்து கொண்டிருந்தாலும்; त्वद्-भक्त्या-உன்னிடத்திலுள்ள பக்தியினாலே; मुखरी-कृतेन-தூண்டப்பட்ட; मया-अपि-என்னாலும்; हठात्-பலாத்காரத்தினால்; संजायमानम्-நன்கு உண்டாகிய; इदम्-இந்த; स्तोत्रम्-ஸ்தோத்ரமானது; रचितम्-செய்யப்பட்டது, नूनम्-நிச்சயம்.

(பொழிப்புரை)

ஓ அன்னையே! நான் மிகவும் அல்பபுத்தியுள்ளவன் என்பது எனக்கு நன்கு தெரியும். எனினும் உன்னிடத்திலே நான் கொண்ட ஆழ்ந்த பக்தியின் பாவசத்தினால் தூண்டப்பட்ட காரணத்தாலே என்னையுமறியாது இந்த ஸ்துதி

தானுகவேயுண்டாகியது. இது உறுதி. இந்த ஸ்துதியிலே காவ்யலக்ஷணங்களுக்குரிய சொல், பொருள் முதலிய அணிகளும்; ஓஜஸ், காந்தி, ப்ரஸாதம்-தெளிவு-முதலிய குணங்களும் ச்ருங்காரம் முதலிய நவரஸங்களும் இல்லாதிருந்தாலும், அல்லது அவைகள் யாவும் நிரம்பியிருந்தாலும், உன்னிடத்திலே உறுதியுடன் கூடிய பக்தியுள்ளவர்கள் ஆதரவோடு கூட பாராயணம் செய்வது நிச்சயம். ஆகவே இந்த ஸ்தவமானது தோஷத்தோடும், குணத்தோடும், நிந்திக்கத்தக்கதாகவோ நிந்திக்கத்தகாததாகவோ, இருந்தாலும் அதைக் குறித்த சிந்தனையால் எனக்கு என்ன பிரயோஜனம்? ஒன்றுமில்லை. எல்லாம் உன்னிடத்திலுள்ள பக்தியின் பரவசத்தாலெழுந்த ஸ்துதிகளல்லவா?

(விரிவுரை)

உண்மையில் ஆராய்ந்து பார்த்தால் இந்த ஸ்துதியானது ஸகல காவ்யலக்ஷணமும் பொருந்தியதோர் சிறு காவ்யமெனச் சொல்லலாம். **“स एष रसनां रसतमः”** “இதுவே ரஸங்களுக்குள் ரஸத்தன்மையுடையது” என உபநிஷத்தில் கூறியிருப்பது போல, இச்சிறு காவியத்திலே பக்திரஸத்தையே முக்கியமாகக் கொண்டு, சிவசக்தியின் வடிவாயமைந்ததும், அகண்டாநந்தஸம்வித்தினுடைய வடிவாயமைந்ததும், தத்துவவடிவாயமைந்ததுமான சக்தியினுடைய உபாஸனைக்கு இன்றியமையாத ஸாதனமெனக் கருதி இங்கு விளக்கப்பட்டதாகும். அதற்கு அங்கங்களாக ச்ருங்காரம் முதலிய ரஸங்களும் ஆங்காங்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

அதாவது—மூன்று, ஐந்து, ஆறு, எட்டு, பதினாறு இவைகளில் அத்புதரஸமும்; நான்காவது ச்லோகத்தில் கருணாரஸமும்; ஏழாவது ச்லோகத்தில் சாந்தரஸமும்; ஒன்பதாவது ச்லோகத்தில் விப்ரலம்பச்ருங்காரரஸமும் ; பத்தாவதுச்லோகத்தில் சிருங்காரம், அத்புதம் இவையிரண்டும்; பதினோராவது ச்லோகத்தில் ஸம்போகச்ருங்காரம், சாந்தம் இவையிரண்டும்; பன்னிரண்டாவது ச்லோகத்தில் அத்புதம், வீரம் இவையிரண்டும்; பதிமூன்றுவது ச்லோகத்தில் பயாநகரஸமும்; பதினான்காவது ச்லோகத்தில் கருணாரஸமும்; பதினைந்தாவது ச்லோகத்தில் அத்புதம், பயாநகம் இவையிரண்டும்; பதினேழாவது ச்லோகத்திலே பயாநகமும்; பதினெட்டாவது ச்லோகத்தில் கேவலம் பாவங்களும், விளக்கப்பட்டிருக்கின்றன. மற்றும் ஒரே ரஸத்தோடு துவங்கி முடிவிலும் அதையே கொள்வது ஆன்றோர் மரபுமாம். முதலிரண்டு ச்லோகங்களிலே உவமையுடன் அநுப்ராஸம், ஸௌகுமார்யம் முதலிய சொல்லணியிலக்கணங்களும் கொண்ட காரணத்தாலும் இது ஒரு சித்ரகாவ்யமுமாகும். இவ்விதம் இந்த ஸ்துதியை ரஸங்களையும், அணிகளையும் முக்கியமாகக் கொண்டு நுண்ணிய ஆராய்ச்சியோடு பார்த்தால் இது ஒரு லகுகாவ்யமென்பது விளங்காமற் போகாது.

ஆகவே கவியானவர் தான் செய்த ஸ்தவத்திற்குக் காவ்ய இலக்கணங்களோடு கூடிய லகுஸ்தவம் எனப் பெயரிட்டதும் நன்கு பொருந்தும். மற்றும் இதையியற்றிய கவி தன்னிடத்திலே லகுத்வத்தை (வணக்கத்தை) ஆரோபித்துக் கொண்டதால் இந்நூலுக்கு லகுஸ்துதி யென்பது

மாம். ஏனென்னில் அவரது திருநாமம் லகுபட்டாரகர் என்பது. அல்லது लघु-क्षिप्रम्-अरं-द्रुतम्' லகு-க்ஷிப்ரம்-அரம்-த்ருதம்-என்ற பதங்களுக்குக் கோசங்களிலே, வேகம்-சீக்கிரம் எனப்பொருள்களுண்டு. அதன் காரணமாக சீக்கிரத்தில் அநாயாஸமாகச்செய்யப்பட்டது கொண்டு லகுஸ்துதியென்றுவது; சப்தங்களினுல் லகுவாகவும்; அர்த்தங்களினுல் மஹத்தாகவும் இருப்பது கொண்டு லகு ஸ்துதி யென்றுவது; லகுவாக-ஸுலபமாக-ஸ்துதி செய்யும் பக்தர்களிடத்திலே உண்மை வடிவாயிருந்து கொண்டு அவர்கள் கோரிய பலன்களை வெகு சீக்கிரத்திலே கொடுப்பதாலும், ஸ்ரீதேவியினுடைய ஸ்துதியின் வடிவாயமைந்த காரணத்தாலும் லகுஸ்துதியெனவும் பொருள் கொள்ளலாம். சிவம்.

இவ்விதம் ஸ்ரீலகுபட்டாரகரியற்றிய லகுஸ்தவத்திற்கு வாதூல வேங்கடஸுப்ரஹ்மண்யருடைய தநயன் ராமசந்த்ரசர்மா இயற்றிய லகுதீபிகை யென்னும் தமிழுரை இவண் முற்றும்.

---

# श्लोकानुक्रमणिका

